# மனோரா



Dr. மூ. இராசாராம் I.A.S.,
Dr. இராசு பவுன்துரை.



சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் நூலக வெளியீட்டு எண் : 412

# மனோரா

முனைவர் மூ. இராசாராம் இ. ஆ. ப,
மாவட்ட ஆட்சியர் மற்றும் இயக்குநர்
சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.

முனைவர் இராசு பவுன்துரை M.A, Ph.D.,
இணைப்பேராசிரியர், தமிழ்ப்பல்கலைக் கழகம்.



சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சாவூர்.

2000 விலை : ரூ.60.00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | மனோரா |
| ஆசிரியர்கள் | : | Dr. மூ. இராசாராம் I.A.S<br>Dr. இராசு பவுன்துரை |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண் | : | 412 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | பிப்ரவரி 2000 |
| தாள் | : | 18.6 kg மேப் லித்தோ |
| நூல் அளவு | : | 21 x 14 செ.மீ |
| பக்கங்கள் | : | 104 + 8 கலர் படங்கள் |
| படிகள் | : | 1000 |
| எழுத்து | : | 11 புள்ளி |
| புத்தகக்கட்டு | : | ஆர்ட்போர்ட் |
| அச்சிட்டோர் | : | லிப்ரா ஆப்செட் பிரிண்டர்ஸ் |
| விலை | : | ரூ.60.00 |
| பொருள் | : | வரலாறு - கட்டடக்கலை |

பின்அட்டையில் உள்ள கப்பல் ஓவியத்திற்காக

இந்தியக் கப்பல் படை

தேசிய அருங்காட்சியகத்திற்கு

நன்றி.

க. அன்பழகன் எம். ஏ.,
கல்வி அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009.
நாள் 21.03.2000

# அணிந்துரை

"சோழவளநாடு சோறு உடைத்து" என்னும் நன்மொழி பெற்றிட ஏதுவாக, கரைபுரண்டோடிய காவிரி வெள்ளத்தைக் கட்டியாள, சோழன் கரிகாலன் கட்டிய வரலாற்றுச் சிறப்புடைய கல்லணையையும்; வெற்றிகள் பல கொண்ட இராசராசன், தனது புகழ் நிலைத்திட எழுப்பிய தஞ்சை பெரிகோயில் கோபுரத்தையும்; ஆவுடையார்கோவில், தாராசுரம் முதலான ஊர்க் கோயில்களில் காணப்படும் கண்கவர் சிற்பங்களையும்; தஞ்சையில் மராட்டிய சரபோஜி மன்னன் கட்டியுள்ள அரண்மனையையும்; சரசுவதி மகால் நூலகக் கட்டிடத்தின் திட்டமிட்ட அமைப்பையும் கொண்டு புகழ் எய்தியுள்ள சோழமண்டலம், சரபோஜியின் 'மனோரா' கடற்கரை கோட்டையாலும் பெருமை கொண்டுள்ளது.

மனோரா - தஞ்சை மாவட்டத்தின் தெற்குக் கடற்கரையில், பட்டுக்கோட்டை, சேதுபாவா சத்திரத்தை அடுத்து சரபேந்திர ராஜபட்டினம் ஆக வடிவமைக்கப்பட்ட பட்டினத்தினைச் சார்ந்த எழிலார்ந்த கலங்கரை விளக்கம் ஆகக் காட்சி அளிக்கின்றது. அதன் சிறப்பைக் கேட்டவர் மிகப்பலர், எழிலைக் கண்டவரும் பலர் எனினும் அதன் வரலாற்றுப் பெருமையை அறியும் வாய்ப்பினை அவர்கள் பெறவில்லை.

தொன்னாள் முதலாகவே கிழக்கிலும் மேற்கிலும் உள்ள கடல்கடந்த நாடுகட்கிடையில், கடல்வழி வாணிபம் வளர்வதற்கு இயற்கை அமைப்பால் ஓர் மையமாகத் தமிழகம் விளங்கி வந்துள்ளது. காவிரிப்பூம்பட்டினம் (புகார்), கொற்கை, காயல், அழகன்குளம் முதலான துறைமுகங்கள் ஏற்றுமதி இறக்குமதிக்கேற்ற தகுதியுடன் நெடுங்காலம் விளங்கியுள்ளன. கடந்த மூன்று நூற்றாண்டுகள் முன்னர் மேல்நாட்டினர். குறிப்பாக ஆங்கிலேயர் வணிகர்களாக வந்திறங்கி, நிலைகொண்டு, நாடாளும் நோக்கினராக மாறி, படைகொண்டு உள்நாட்டு மன்னர்களை மடக்கி ஆட்சிபெற்ற வரலாற்றை நாம் அறிவோம். ஒல்லும் வகையால் ஆட்சி உரிமை காத்திட முனைந்து நின்ற மன்னர்களும் பின்னர் ஒடுங்க நேரிட்டது.

சரபோஜி மன்னர் வீரம் கொண்டவர் என்றாலும், அமைதியைக் காப்பதிலும், மக்கள் நலன் வளர்ப்பதிலும், கலைகளைப் பெருக்குவதிலும் மிகுந்த ஆர்வத்துடன் ஈடுபட்டவர். அவரது காலத்தில் பிரஞ்சு மாவீரன் நெப்போலியன் இங்கிலாந்து நாட்டின் கடல் ஆதிக்கத்தை வீழ்த்தத் தொடர்ந்து போரிட்டான். நெப்போலியன் லீப்சிக் என்னும் இடத்தில் நடந்த போரில் 1813-ஆம் ஆண்டில் முதன்முதலாகத் தோல்வியுற்றான். அப்போது ஆங்கிலேயருடன் நட்புறவு கொண்டிருந்த இரண்டாம் சரபோஜி அந்த வெற்றியைக் கொண்டாடவே இந்த 'மனோரா' கோட்டையை

எழுப்பியுள்ளார் 'மனோரா'வை மையமாகக் கொண்டு. தமிழக முதல்வர் கலைஞர் அவர்கள் எழுதிய 'புதையல்' கதை மூலமும், திரைப்படம் மூலமுமே தமிழ் மக்கள் அதைப்பற்றி அறியலானார்கள் ஆயினும் அதைப் பற்றியும், அது இடம் பெற்றுள்ள சாளுவநாய்க்கன் பட்டினம் என்னும் ஊரைக் குறித்தும், பல வரலாற்றுச் சிறப்புக்குரிய செய்திகளைத் தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் இடம் பெற்றுள்ள ஆவணங்களின் மூலம் கண்டறிந்து ஆய்ந்து இந்த ஏடு வரையப்பட்டுள்ளது. குறிப்பாக, மனோரா கோட்டையின் அமைப்பும் கட்டடக்கலையின் சிறப்பும், மனோராவின் குறுக்கு வெட்டுத் தோற்றமும், உப்பரிகை அமைப்பும் கலங்கரை விளக்கு இடம் பெற்ற முறையும், கோட்டை அகழி அமைந்த விதமும், தொங்குபாலத்தின் சிறப்பும் முதலான பலவற்றைப் பற்றிய விவரங்களும் இந்நூலில் தரப்பட்டுள்ளன.

மனோராவில் இடம்பெற்றுள்ள கல்வெட்டுகளால் அறியப்படும் செய்திகள் பல. அவை தமிழ், ஆங்கிலம், மராட்டி, தெலுங்கு, உருது ஆகிய மொழிகளில் வெட்டப்பட்டிருப்பது, நம்நாடு பலமொழியினரையும் கொண்டதாகலின் அங்கு வரக்கூடிய பலரும் அவற்றைப் படித்தறிந்து விளக்கம் பெறச் செய்யவே பலமொழிகளில் கல்வெட்டு அமைந்திடுவதின் தேவையை சரபோஜி மன்னர் உணர்ந்திருந்ததை இது காட்டும். இந்திய நடுவண் அரசு மாநில ஆட்சிமொழிகளை எல்லாம் மைய ஆட்சிமொழிகளாக ஏற்றுச் செயற்படுத்த வேண்டியதன் அவசியத்தைத் தெளிவதற்கு இது ஒரு நல்ல எடுத்துக்காட்டாகும்.

அக்காலச் சூழலில் சாளுவநாயக்கன் பட்டினத் துறைமுகம் எவ்வளவு சிறப்புடையதாக நிலவியது என்பதும் பல சான்றுகளால் விவரிக்கப்பட்டுள்ளது. மராட்டியரின் மோடி மொழியில் எழுதப்பட்டுள்ள ஆவணங்களில் இருந்து எடுக்கப்பட்ட பல விவரங்கள் மொழிபெயர்த்துத் தரப்பட்டுள்ளன. அந்தக் கடற்கரைப் பகுதியின் நில அமைப்பின் சிறப்புக் கூறுகளும் வரையப் பட்டுள்ளதால், அப்பகுதி ஒரு சுற்றுலா மையமாக வளர்வதற்கான வாய்ப்பு தெளிவாக்கப்பட்டுள்ளது. இந்நூலை இயற்றுவதில் ஆர்வத்துடன் ஈடுபட்ட மாவட்ட ஆட்சியரும், சரசுவதிமகால் நூலக இயக்குநருமான முனைவர் மு.இராசாராம், இ.ஆ.ப. அவர்களின் அரும்பணியை நான் மிகவும் பாராட்டுகிறேன். இந்த நூலுக்கான ஆவணங்களை எல்லாம் கண்டறிந்து ஆய்ந்து மொழிபெயர்த்து வரைந்து உதவிய முனைவர் இராசு பவுன்துரை அவர்களது சீரிய பணியும் பாராட்டுக்குரியதாகும். பல்வேறு நிருவாகப் பணிக்கிடையிலும் இந்த நூலை இயற்றுவதில் மாவட்ட ஆட்சியர் ஈடுபாடு கொண்டமைக்கு எனது வாழ்த்துக்கள்.

தஞ்சை சரசுவதிமகால் நூலகத்தின் 412-வது வெளியீடாக வரும் இந்நூல் காலத்தால் அழியவிடக்கூடாத 'மனோரா'வின் கலைப் பெட்டகமாகத் திகழ்கிறது. இதனைப் படிப்பவர் பயன்பெற்று மகிழ்வர் ஆதலின், ஒவ்வொருவரும் தவறாது படித்தின்புற விழைகிறேன்.

அன்பன்,

ஆ. அன்பழகன்

# முன்னுரை

கலைகளின் தாயகமாக விளங்கும் தஞ்சைத் தரணியில் பல்லவர் காலந்தொடங்கிச் சோழர், பாண்டியர், போசளர், மொகலாயர், விஜயநகர பேரரசர்கள், நாயக்கர்கள், மராட்டியர், டேனியர், டச்சுக்காரர், ஆங்கிலேயர் போன்ற பல மரபினர்களும், பலநாட்டினர்களும் விட்டுச் சென்றுள்ள கலைக் கருவூலங்கள் எழிலோடு நின்று காட்சியளிப்பதை நாம் கண்டு மகிழ்கிறோம்.

கட்டடங்களாயினும், சிற்பங்களாயினும், ஓவியங்களாயினும் அனைத்திலும் தனித்தன்மையோ, அல்லது கலப்புப் பாணியோ இருப்பதை நாம் காணலாம், வரலாறும், பண்பாடும் அங்கு பொதிந்திருப்பது கண்கூடு.

சோழமண்டலக் கடற்கரையைப் பொருத்தவரை இன்றைய தஞ்சாவூர் மாவட்டத்தின் பகுதியாக விளங்குவது மிகக் குறைந்த பகுதியேயாகும். இம்மாவட்டத்தின் பட்டுக்கோட்டை வட்டத்திலேயே கடற்றுறைகள் விளங்குகின்றன. அவற்றில் ஒன்று தான் சரபேந்திர ராஜபட்டினம் எனும் சிற்றூராகும். நெய்தல் நில வனப்போடும், தென்னை மரங்கள் சூழ்ந்த பசுமையோடும் திகழும் அவ்வூரின் கடற்கரை மணலிடை எடுப்பான கோலத்தோடு விளங்குவது தான் "மனோரா" எனும் மராட்டியர் காலச் சிறு கோட்டையும், கலங்கரை விளக்கமும் ஆகும்.

ஆங்கிலேயர் ஆதிக்கத்திற்குட்பட்ட தஞ்சை மராட்டிய அரசரான இரண்டாம் சரபோஜி கி.பி. 1814 இல் உருவாக்கிய அந்த நினைவுச் சின்னம் பல வரலாற்றுச் செய்திகளைத் தன்னகத்தே கொண்டு நின்று நிலைத்துள்ளது.

மனோரா கட்டடத்தின் கட்டுமானச் சிறப்புகள் பற்றியும், அதன் வரலாற்றுத் தகவல்களைச் சுமந்து நிற்கும் தமிழ், ஆங்கிலம் மற்றும் மராட்டிய மோடி ஆவணங்களையும், கல்வெட்டுக்களையும் ஆராய்ந்து நூல் எழுத முற்பட்டோம். பெரும்பாலான ஆவணங்கள் தஞ்சை மகாராஜா சரபோஜியின் சரசுவதி மகால் நூலகத்தில் உள்ளன. எல்லாத் தரவுகளையும் ஆராய்ந்து, ஒருங்கிணைத்து, நூலாக வடித்துள்ளோம். எளிய இந்த நூலினைத் தஞ்சாவூர் சரசுவதி மகால் நூலகம் தனது 412 ஆவது வெளியீடாக தமிழ் கூறு நல்லுலகுக்குத் தருகின்றது.

இந்நூல் அச்சில் வெளிவர நிதி உதவி நல்கிய மைய அரசுக்கு, எங்களது நன்றி உரியதாகுக.

இந்நூலை நல்ல பதிப்பாக வெளிக்கொணரக் காரணமாக அமைந்த சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம், வெளியீட்டு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன், காப்பாளர் திரு. குடவாயில் பாலசுப்பிரமணியன் ஆகியோரின் பணி இவ்வெளியீட்டுத் தொடர்பில் குறிப்பிட்டு நினைவுகூரத்தக்கது. தமிழ்ப் பல்கலைக்கழக முதுநிலைப் பேராசிரியர் முனைவர் விக்டர். இராஜமாணிக்கம் அவர்கள் அறிவியல் சார்ந்த கருத்து உதவிகள் வழங்கியமைக்கு நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம். சிறந்த முறையில் நூலினை அச்சிட்ட லிப்ரா ஆப்செட் அச்சகத்தாரின் பணி பாராட்டத்தக்கது ஆகும். கலை மற்றும் வரலாறுத் தொடர்பான இந்நூலைத் தமிழ் கூறு நல்லுலகம் வரவேற்கும் என நம்புகிறோம்.

**தஞ்சாவூர்**
**11.02.2000**

**மூ. இராசாராம்**
**இராசு. பவுன்துரை**

# உள்ளுறை

பக்கம்

VIII

# தமிழக வரைபடத்தில் மனோரா அமைவிடம்



# மனோரா - ஓர் அறிமுகம்

தஞ்சாவூர் மாவட்டம் பட்டுக்கோட்டை வட்டம், சேதுபாவா சத்திரம் ஊராட்சி ஒன்றியத்தில் சரபேந்திரராஜபட்டினம் என்றும், முன்னாளில் சாளுவநாயக்கன் பட்டினம் என்றும் அழைக்கப்பட்ட ஊர் வங்கக் கடலோரம், தென்னை மரங்கள் அடர்த்தியாகச் சூழ்ந்த இயற்கை எழிலோடு திகழ்வதாகும். இச்சிறிய கிராமத்தோடு இணைந்துள்ள மல்லிப்பட்டினம் பேரூராகத் திகழ்கின்றது.

பட்டுக் கோட்டை, பேராவூரணி, அதிராம்பட்டினம் ஆகிய ஊர்களிலிருந்து சாலை வழியே மல்லிப் பட்டினம் சென்று அங்கிருந்து சரபேந்திரராஜபட்டினம் அடையலாம். இயற்கை எழிலோடு திகழும் இவ்வூரில் கடற்கரையை ஒட்டி அமைந்துள்ள மனோரா எனும் கட்டடம் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த நினைவுச் சின்னமாகும். எழில் வாய்ந்த இக்கட்டடம் அகழி, கோட்டை தங்கும் அறைகள், ஒன்பது அடுக்கோடு கூடிய கலங்கரை விளக்கக் கோபுரம் ஆகியவற்றோடு திகழ்கின்றது.

தஞ்சையை ஆட்சி செய்த இரண்டாம் சரபோஜி எனும் மராட்டிய மன்னர் ஆங்கிலேயர்களின் மேலாதிக்கத்தின் கீழ் தம் அரசை நடத்த வேண்டிய கட்டுப்பாட்டின் கீழ் இருந்தார்.

உலக நாடுகளில் காலனி ஆதிக்கத்தை நிறுவும் போட்டியில் ஆங்கிலேயர்களும், பிரஞ்சுக்காரர்களும், மற்ற மேலை நாட்டவர்களும் தீவிரமாக ஈடுபட்டு, ஒருவருக்கொருவர் போரிட்டுக் கொண்டிருந்த நாளில், ஆங்கிலேயர்களுக்கு இந்திய அரசர்கள் உதவும் நிலை ஏற்பட்டது. அச்சூழலில் 1813 ஆம் ஆண்டில் ஆங்கிலேயர்களுக்கு எதிரியாய்த் திகழ்ந்த நெப்போலியன் போனபார்ட் எனும் பிரஞ்சுப் பேரரசன் லீப்சிக் எனும் இடத்தில் தோல்வியைத் தழுவினார். பின்பு இரண்டாவது முறையாக 1815 ஆம் ஆண்டில் வாட்டர்லூ சண்டையில் தோல்வியுற்றார்.

நெப்போலியனின் முதல் தோல்வி ஆங்கில ஆதிக்கத்திற்குப் பெருமகிழ்வளித்தது. அவ்வெற்றியை ஆங்கில ஆதிக்கத்திற்கு உட்பட்ட நாட்டினரும், மன்னர்களும் கொண்டாடி மகிழ்ந்தனர். அப்போது தான் ஆங்கிலேயர்களுடன் நட்போடு திகழ்ந்த தஞ்சை அரசர் இரண்டாம் சரபோஜி இந்த மனோரா கோட்டையை ஓராண்டுக்குள் கட்டுவித்து நெப்போலியனின்

தோல்விக்கும், ஆங்கிலேயர்களின் வெற்றிக்கும் நிரந்தர நினைவுச் சின்னமாக்கினார். அதன் வரலாற்றையும் பன்மொழிகளில் கல்வெட்டாக்கி அங்கு பதித்தார்.

ஒருபுறம் அரசியல் வெற்றி தோல்விகளைக் காட்டும் ஒரு நினைவுச் சின்னமாக மனோராக் கோட்டை திகழ்ந்த போதும் மறுபுறம் அது சிறந்த கடல் வணிகமையமாகவும், பாதுகாப்புமிக்க அரணாகவும், அவ்வப்போது அரச குடும்பத்தினர் வந்து தங்குமிடமாகவும் இருந்தது. முக்கியத்துவம் வாய்ந்த வரலாற்று நிகழ்வுகளும் அங்கு ஏற்பட்டுள்ளன.

மனோராக் கோட்டையின் நடுவே அமைந்துள்ள ஒன்பது அடுக்குக் கோபுரம் கலங்கரை விளக்கத் தூணாகவும் விளங்குகின்றது. இக்கட்டடத்தில் பல்வேறு கலை மரபுகள் திகழ்ந்த போதிலும், மராட்டியர்களின் தாயகமான மராட்டிய மாநிலத்தில் விளக்குகள் ஏற்றும் தீபத்தூண் (தீபஸ்தம்பம்) என்ற கட்டட அமைப்பின் மறுபதிப்பாக இது விளங்குகின்றது. இதனை ஒத்த தீபத்தூண்கள் தஞ்சை நகரில் பல இடங்களிலும், திருவையாறு காவிரிக் கரைப்பாலத்திலும் இருப்பதை இன்றும் காணலாம்.

இத்தனை வரலாற்றுச் சிறப்புகளைத் தன்னுள் கொண்டு திகழும் மனோரா பற்றியும், சாளுவநாயக்கன்பட்டினம் எனும் இவ்வூர் பற்றியும் அண்மைக் காலம் வரை தமிழக மக்கள் அறியாமல் தான் இருந்தார்கள். தமிழக முதல்வர் மாண்புமிகு கலைஞர் அவர்களின் "**புதையல்**" எனும் புதினமும், திரைப்படமும் வெளிவந்த பிறகு தான் படித்தவர்களும், பாமரமக்களும் அவ்வூரின் ஏற்றமிகு சிறப்புகளைத் தெளிவாக அறிந்தனர்.

தமிழக அரசின் தமிழ் ஆட்சி மொழி மற்றும் பண்பாட்டுத் துறையின் கீழ் செயல்படும் தொல் பொருள் ஆய்வுத் துறையின் பராமரிப்பில் உள்ள மனோராவைப் பற்றி உலக மக்கள் அறியும் வண்ணம் சுற்றுலா மையமாக மேம்படுத்த அரசு பல நடவடிக்கைகளை மேற் கொண்டு வருவது சிறப்பிற்குரியதாகும். உலக அளவில் தகவல் பரிமாற்றங்களுடன் விளங்கக் கூடிய உலக கிராமியமாக (GLOBAL VILLAGE) இவ்வூரை மாற்றும் தனியார் முயற்சிகளும் அங்கு நிகழ்வது குறிப்பிடத்தக்கதாகும்.

சாளுவ நாயக்கன் பட்டினத்து மனோரா பற்றிய பல்வேறு கூறுகளை பல வரலாற்றுச் சான்றுகள் கொண்டும் சரசுவதி மகால் ஆவணங்கள் மூலமாகவும் இனிக் காண்போம்.

# தஞ்சையில் மராட்டியர் ஆட்சி
# (கி. பி. 1675 - 1855)

கி. பி. 1535 இல் உதயமான தஞ்சாவூர் நாயக்கர் ஆட்சி 1675 பிப்ரவரி 3 ஆம் நாளில் விஜயராகவ நாயக்கரின் போர்க்கள மரணத்தோடு நிறைவு எய்தியது. பின்பு தஞ்சை பீஜப்பூர் சுல்தானின் படைத் தளபதியாக வந்த ஏகோஜி என்பாரின் கட்டுப்பாட்டுக்குள் வந்தது. ஔரங்கசீப்பின் படை எடுப்பால் பீஜப்பூர் பேரரசு வலிமை இழந்ததும், பெங்களூர் நகரின் ஜாகீர் உரிமை ஏகோஜியிடமிருந்து பறிக்கப்பட்டதும், தஞ்சையில் மராட்டிய அரசு நிலைபெறக் காரணமாக அமைந்தன. அவ்வரசு கி.பி. 1855 இல் மறைந்த கடைசி சிவாஜி என்பாரின் ஆட்சியோடு நிறைவு பெற்றது. ஏறத்தாழ 180 ஆண்டுக்காலம் மராட்டிய மன்னர்களின் ஆட்சியால் தஞ்சை பண்பாடு, கலை, இலக்கியம் போன்ற பல்வேறு துறைகளில் மாறுபாடுகளையும் வளர்ச்சி நிலைகளையும் கண்டு வளர்ந்துள்ளது. அவர்கள் விட்டுச் சென்றுள்ள கலைச் செல்வங்களும், இன்ன பிறவும் இன்றும் நிலைத்து நின்று அவர் தம் புகழ் பாடுகின்றன.

மராட்டிய மாநிலத்தில் வாழ்ந்த சகஜி என்பாருக்குப் பிறந்த இருமக்களில் முதலாமவர் மராட்டிய மாநிலத்தில் பொற்காலத்தை உருவாக்கிய சத்திரபதி சிவாஜியாவார். அவர் சகஜியின் முதல் மனைவியின் மகன். இரண்டாம் மனைவிக்கு மகவாய்ப் பிறந்தவரே வெங்கோஜி எனும் ஏகோஜியாவார்.

கி. பி. 1675 முதல் கி. பி. 1683 வரை தஞ்சையை ஆட்சி செய்த ஏகோஜியின் மூன்று புதல்வர்களே சகஜி, முதலாம் சரபோஜி, துக்கோஜி ஆவர். இவர்கள் காலத்தில் இசை, நாட்டியம், இலக்கியம், கட்டடக்கலை போன்றவை ஏற்றம் பெற்று வளர்ந்தன. சகஜி இசைநயம் வாய்ந்த பதங்கள் பலவற்றைப் படைத்து அழியாப் புகழ் எய்தினார். சகஜி மன்னர் கி. பி. 1712 இல் வல்லத்தில் இயற்கை எய்தினார். அவரோடு இணைந்து ஆட்சிப் பொறுப்புகளைப் புரிந்து வந்த முதலாம் சரபோஜி கி. பி. 1712 முதல் 1728 வரை நல்லாட்சி நடத்தினார். பின்பு அவரது தம்பியான துக்கோஜி எனும் துளஜா கி. பி. 1729 இல் தஞ்சை அரசராகப் பொறுப்பேற்று கி.பி. 1739 வரை நல்லாட்சி நடத்தினார்.

துளஜாவின் ஒரே மகனான பாவா சாகிப் எனும் இரண்டாம்

ஏகோஜி கி. பி. 1736 - 37 ஆகிய இரண்டு ஆண்டுகளே வாழ்ந்து உடல் நலக்குறைவால் மரணமுற்றார். 1737 இல் தஞ்சை பொறுப்பை ஏற்ற பாவாசாகிப்பின் மனைவி கி.பி. 1738 வரை இரண்டு ஆண்டுகள் அரச பீடத்தில் அமர்ந்து வரலாற்றில் அழியா இடம் பெற்றார். தஞ்சை அரசைக் கவர முனைந்த எதிரிகளுடன் கடும் சமர்புரிந்து வீரமரணம் அடைந்தார்.

சுஜான் பாயின் மரணத்திற்குப் பிறகு ஆட்சி உரிமை பெறப் பலர் முயன்றனர். பாவா சாகிப் சுஜான் பாய் தம்பதியருக்குக் குழந்தைப்பேறு இல்லாததால், பாவா சாகிப் - அன்ன பூர்ணா ஆகியோருக்கு மகனாய்ப் பிறந்த பிரதாபசிம்மன் கி. பி. 1739 இல் தஞ்சை அரசராக மணிமுடி சூடிக் கொண்டார்.

தஞ்சை மராட்டியர்களின் வரலாற்றில் பிரதாபசிம்மனின் ஆட்சியில் தான் பல போர்க்களங்களைஅவர்கள் சந்திக்கும் நிலை ஏற்பட்டது. பிரதாப சிம்மனுக்கு முன்னவர்களின் ஆட்சி, போர் நிகழ்ச்சிகளின்றி அமைதியாகவும், பின்னவர்களின் ஆட்சி ஆங்கிலேயர்களுக்குப் பணிந்த அரசாகவும் திகழ்ந்தது. இவரது ஆட்சியில் நவாப்புகள், நிசாம்கள், ஆங்கிலேயக் கம்பெனியார், பிரஞ்சுக்காரர்கள் முதலானவர்களின் பலமுறைத்தாக்குதல்கள், மற்றும் தலையீடுகளைச் சந்திக்க வேண்டிய மிகக் கடுமையான நிலை உருவாயிற்று. தன் துணைத் தலைவரான மானோசி என்பாரின் பெரு வீரத்தாலும், நுண்ணறிவின் திறனாலும் பிரதாப சிம்மன் பலவெற்றிகளை அடைய முடிந்தது.

மானோசியைப் போலவே டபீர் பண்டிதரின் உறுதுணையும் பிரதாபசிம்மனைச் செவ்வனே செயலாற்ற உதவிற்று. திருச்சியில் பிரஞ்சுக் காரர்களுடன் சந்தா சாகேப், தஞ்சையில் புரட்சியாளனான காட்டு ராஜா எனும் சாகுசி மற்றும் கில்லேதார் சையத் முதலியவர்களின் சதி ஆங்கிலேய கிழக்கிந்திய கம்பெனியின் உறவுடன் கருநாடக நவாப் மற்றும் நிசாம் போன்ற அனைவரின் எதிர்ப்பு ஆகியவற்றைச் சந்தித்துச் சமாளித்து, தஞ்சை அரசை நடத்திய ஒரு பெருவீரர் பிரதாப சிம்மனேயாவார்.

காட்டுராசா பிரஞ்சுக்காரர்களின் துணை கொண்டு ஆட்சியைப் பிடிக்கச் செய்த முயற்சிகள் தோல்வியுறவே, கிழக்கிந்தியக் கம்பெனியார் பிரதாப சிம்மனின் ஆளுகையில் இருந்த தேவிக் கோட்டையைக் (கொள்ளிடம் கடலோடு கலக்கும் இடத்தில் உள்ள தீவு) கைப்பற்ற முயன்றனர். இக்கோட்டையைக் காத்த மானோசியின் திறமையாலும், வலிமையாலும் கிழக்கிந்தியக்

கம்பெனியார் எடுத்த முயற்சியில் லாரன்சு, கிளைவ் முதலான கம்பெனியின் தளபதிகள் தலைமைதாங்க, தேவிக்கோட்டை கம்பெனியாரிடம் வீழ்ச்சியடைந்தது. பிரதாப சிம்மன் கிழக்கிந்தியக் கம்பெனியாரிடம் சமாதானமாகச் செல்ல வேண்டியதாயிற்று. இந்நிகழ்ச்சி தான் இந்திய வரலாற்றிலேயே கிழக்கிந்தியக் கம்பெனியார் வணிகத்தை விடுத்து அரசுக் கட்டிலில் ஏறக் கால் கோள் விழாவாக அமைந்தது.

கி.பி. 1763 இல் பிரதாப சிம்மனின் மறைவுக்குப் பிறகு இரண்டாம் துளஜா தஞ்சை மராட்டிய அரசராக அரியணை அமர்ந்தார். கி. பி. 1771 இல் துளஜா இராமநாதபுரம் அரசருடன் போருக்கு ஆயத்தமானார். இதனால் அனுமந்த குடியையும், சின்ன மருது, பெரிய மருது ஆகியோரிடமிருந்து திறையையும் பெற்றார். ஆர்க்காட்டு நவாப்பும் ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியாரும் சேர்ந்து கொண்டு துளஜா மன்னருக்குக் கடும் தொல்லைகள் கொடுத்தனர். இதன் முடிவாக ஆர்க்காட்டு நவாப்பிற்கு ஒரு பெரும் தொகையைச் செலுத்துவது என உடன்படிக்கையாயிற்று. கிழக்கிந்தியக் கம்பெனி இதற்கு ஆதரவு காட்டியது. ஆனால் துளஜாவால் அத்தொகையைச் செலுத்த முடியவில்லை.

நவாப் முகமது அலி, கம்பெனியாரின் உதவியுடன் கி.பி. 1773 இல் தஞ்சையைத் தாக்கி, துளஜாவைச் சிறைகொண்டான். மூன்றாண்டுகள் துளஜா தஞ்சை அரண்மனையிலேயே சிறையில் இருந்தார். தஞ்சை அரசு நவாப்பின் ஆளுகையின் கீழ் இருந்தது. கி.பி. 1776 இல் ஆங்கிலேயே நிருவாகம் (COURT OF DIRECTORS OF ENGLAND) இதனைத் தள்ளுபடி செய்து, சென்னையில் கவர்னராக இருந்த லார்டு பிகாட் என்பவரைத் தஞ்சைக்கு அனுப்பித் துளஜாவை மீண்டும் அரியணையில் அமர்த்தியது. கி.பி. 1787 இல் துளஜா இவ்வுலக வாழ்வை நீத்தார்.

அவரது மறைவுக்குப் பின்பு அரசியல் குழப்பம் சூழ்ந்த நிலையில் பிரதாப சிம்மனின் மற்றொரு மகனான அமர சிம்மன் தஞ்சை அரச கட்டிலில் அமர்ந்தார். இதற்குக் கிழக்கிந்தியக் கம்பெனி பெரிதும் துணை நின்றது. கம்பெனியின் கவர்னர் சர். அர்ச்பால்டு கேம்பல் என்பவரைத் தலைமையாகக் கொண்ட குழு தஞ்சைக்கு வருகை புரிந்து, சரசுவதி மகாலில் இருந்த தர்ம சாஸ்திரிகளை விசாரணை செய்து துளஜாவின் மனைவியரால் அங்கீகரிக்கப்பட்ட சரபோஜி என்பவரின் சுவீகாரம் செல்லாது என அறிவித்தது. இதனால் அமரசிம்மன் தஞ்சை மன்னர் என அங்கீகரிக்கப்பட்டார்.

அமரசிம்மன் ஆட்சி பீடம் ஏறுவதற்குக் கிழக்கிந்தியக் கம்பெனியாரின் உதவி தேவைப்பட்டதெனினும், தான் அரியணை அமர்ந்தது முதல் இறுதிவரை அவர்களை எதிர்த்து வீர வரலாறு படைத்தார்.

இவரது ஆட்சியின் போது அரண்மனையில் இருந்த அரச குடும்பத்தினரில் ஒரு பிரிவினர் இவரை ஆதரித்தும், மற்றொரு பிரிவினர் எதிர்த்தும் செயல்பட்டனர். அப்போது இதனை ஏற்றதொரு சந்தர்ப்பமாகக் கொண்டு கிழக்கிந்தியக் கம்பெனியார் செயல்படத் தொடங்கினர். சுவார்ட்ஸ் பாதிரியாரின் பராமரிப்பில் வளர்ந்த சரபோஜியைக் கம்பெனியார் அமரசிம்மனுக்குப் பதிலாக நியமித்தனர். கி.பி. 1798 இல் கிழக்கிந்தியக் கம்பெனியாரின் முழு முயற்சியால் முடி சூடப்பட்ட இரண்டாம் சரபோஜியின் தனியாட்சி ஓராண்டு மட்டுமே நீடித்தது. பின்னர் கம்பெனியார் சரபோஜியின் ஆட்சியில் குறைகளெனக் கூறி அவரது நாடாளும் உரிமையைப் பறித்தது. அதற்குப் பதிலாக ஓய்வூதியம் வழங்கினர். இதன்படி கம்பெனியாரிடமிருந்து 1 இலட்சம் பகோடா ஓய்வூதியத்தையும், நாட்டின் வருவாயில் ஐந்தில் ஒருபங்கையும் பெற்றார். மன்னர் என்ற பெயர் இருந்ததேயன்றி நாடாளும் உரிமை அனைத்தையும் கம்பெனியாரே ஏற்று நடத்தினர்.

அரசு நிருவாகச் சுமை இல்லாததாலும், சிறந்த கல்வியாளராக விளங்கியதாலும் கவின் கலைகளை வளர்ப்பதிலும், தலைசிறந்த அரண்மனை நூலகத்தை விரிவுபடுத்துவதிலும் தம்வாழ்நாளை அர்ப்பணித்தார். சாளுவநாயக்கன்பட்டினம் எனும் சரபேந்திரராஜபட்டினத்தில் மனோரா எனும் நினைவுச்சின்னம் அமைத்து அழியாப் புகழ் பெற்றார்.

கி.பி. 1832 இல் சரபோஜி மன்னர் மரணமடைந்த பிறகு அவரது ஒரே மகனான சிவாஜி தஞ்சை அரசராகப் பொறுப்பேற்றார். 1855 வரை வாழ்ந்த இவரது மறைவோடு தஞ்சை மராட்டியர் ஆட்சி முடிவுற்றது.

# தஞ்சை மராட்டியரின் கவின்மிகு கட்டடக்கலை வரலாறு

மராட்டிய மன்னர்களின் ஆட்சியின் போது தஞ்சைப் பகுதியில் இசை, நடனம், நாடகம், சிற்பம், கட்டடக்கலை முதலான கலைகள் வளர்ச்சியுற்றன. இரண்டாம் சரபோசி மன்னர் காலத்தில் ஐரோப்பியர்களின் வருகையாலும் ஆங்கிலக்கம்பெனியரின் தொடர்பாலும் நகரமைப்பு, கிராம அமைப்பு, கட்டட அமைப்பு முறைகளில் மிகப் பெரிய மாற்றங்கள் ஏற்பட்டன. இரண்டாம் ஏகோசி, இரண்டாம் சரபோசி மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் புதிய புதிய கட்டடங்கள் தோன்றின. இவர்களது ஆட்சிக்காலம் கட்டடக்கலையின் மறுமலர்ச்சிக் காலம் ஆகும். தஞ்சை நகரமைப்பு சீராக்கப்பட்டுத் 'தென்னாட்டின் பாரீஸ்' எனத் திகழ்ந்தது. மராட்டிய இனத்தவராயினும் தமிழர்களின் பண்பாடு, மொழி வளர்ச்சி ஆகியவற்றில் இவர்கள் மிகுந்த ஆர்வத்தையும் ஈடுபாட்டையும் செலுத்திக் கலைகளை வளர்த்தனர் என்பது வரலாற்று உண்மை.

மராட்டியர்களின் கலைத்திறன் மற்றும் செல்வச் சிறப்பைத் தஞ்சை அரண்மனை நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றது. பன்னிரெண்டு மகால்களும் பதினெட்டுக் கானாக்களும் மராட்டியர் அரண்மனையில் இருந்ததாக மோடி ஆவணங்கள் கூறுகின்றன.

ஆயுதசாலை (ஜிராத் கானா), யானை கட்டுமிடம் (உறத்தி கானா), வெடிமருந்து வைக்குமிடம் (தாரு கானா), சாராயம் (சராப்கானா), குளிர்பானம் (ஸர்பத்கானா வழங்குமிடங்கள் அரண்மனையின் அகத்தே இருந்துள்ளன. இது போன்றே உடற் பயிற்சி, மல்யுத்தம், பீரங்கிப் பிரிவு, மருத்துவமனை, நெற் கிடங்கு, ஆவணக்காப்பகம் எனப் பல்வேறு கட்டடப் பகுதிகள் இந்த அரண்மனையில் இருந்துள்ளன. ஆனால் அவற்றில் பல அழிவுற்றும் சிதைந்தும் போய்விட்டன.

கஜானா, குதிரைலாயம், மாட்டுப் பண்ணை, பல்லக்குக் கூடம், மராமத்துப் பிரிவு, தங்கச்சாலை, நெற்களஞ்சியம் போன்ற கட்டடப் பிரிவுகள் 'மகால்' என்னும் பெயரில் அழைக்கப்பட்டுள்ளன.

மராட்டியர் அரண்மனையின் அகத்தே, மிருகக்காட்சி சாலை ஒன்றை 18-ஆம் நூற்றாண்டிலேயே அமைத்துள்ளனர் என்பது

சிறப்பாகும். அரண்மனைக்கு வரும் சிறப்பு விருந்தினர்கள் இக்காட்சியகத்தைக் கண்டு இன்புற்றுச் செல்வர். இக்காட்சியகத்தில் தமிழகத்தின் பல்வேறு இடங்களிலிருந்து பிடிக்கப்பட்ட மிருகங்கள், பறவைகள் கொண்டு வரப்பட்டு வளர்க்கப்பட்டன. இதுவே தமிழகத்தின் முதல் மிருகக்காட்சி சாலையாகும். மராட்டிய மன்னர்கள் வேட்டையாடுவதில் மிகுந்த ஆர்வம் கொண்டவர்கள். 'வேட்டை மகால்' என்ற பெயரில் கட்டடங்களைக் காடுகளில் இவர்கள் கட்டியுள்ளனர்.

சரபோசி மன்னர் தமது காசியாத்திரைக்குப் பிறகு தஞ்சை அரண்மனைப் பகுதியில் ஐந்து அங்கண மாடிக்கட்டடத்தைக் கட்டினார். இக்கட்டடத்திலுள்ள சாளரங்கள் (Bay windows) அணி அலங்காரம் செய்யப்பட்டவை. இவற்றின் வழியே அரசியரும் மன்னரும் ஊர்வலங்களைக் காண்பர். இக்கட்டடம் இந்து, மொகலாயர், ஆங்கிலேயர் கட்டடக்கலையின் கூட்டு வடிவமாகத் தோன்றுகின்றது. சுற்றுலாப் பயணிகளைக் கவரும் வண்ணம் சர்ஜாமாடி எனும் இக்கட்டடம் இன்றும் திகழ்கின்றது.

மராட்டி தர்பார்ஹால் என்னும் கட்டடம் பெரிய தூண்களால் கட்டப்பட்டுள்ளது. தூண்கள் அலங்காரம் செய்யப்பட்டும் சுவர்களில் ஓவியங்கள் வரையப்பட்டும் உள்ளன. இச்சுவரில் நாயக்கர் காலத்திய ஓவியங்களும் காணப்படுகின்றன. தற்பொழுது இக்கட்டடம் மராட்டியர் அருங்காட்சியமாக உள்ளது. இதனருகே சுரங்கப் பாதை ஒன்று செல்லுகின்றது. அரசர்சென்று வருவதற்கு இச்சுரங்கப்பாதை அமைக்கப்பட்டுள்ளது. இக்கோட்டையில் மற்றொரு தர்பார்உறால் உள்ளது. இது தஞ்சை நாயக்கர் காலத்தில் கட்டப்பட்டது. உயர்ந்த தூண்களின் முகப்புப் பகுதியில் சுதை அலங்காரம் நிறைந்து காணப்படுகின்றது. சுதை அலங்காரங்கள் தஞ்சை மராட்டியரின் கலைப் பாணியைப் பெற்றுத் திகழ்கின்றன. ஓவியங்கள் தஞ்சை மராட்டிய - ஆங்கிலப் பாணியை வெளிப்படுத்துகின்றன.

அரண்மனையின் அந்தப்புரத்தின் அருகே நீச்சல் குளம் அமைத்துள்ளனர். இருட்டு மகால் என்ற பகுதி பூமியின் கீழ்ப்பகுதியில் கட்டப்பட்ட பகுதியாகும். இக்கட்டடம் 'கிருஷ்ணவிலாசம்' என்றும் அழைக்கப்படுகின்றது. இதன் உள்ளே, நீராடுவதற்கும் உல்லாசமாக இருப்பதற்கும் வேண்டிய வசதிகள் உள்ளன. இக்கட்டடச் சுவர்களில் வரையப்பட்டுள்ள 'கிருஷ்ண லீலை' ஓவியங்கள் கலை உணர்வைத் தூண்டுவன. இக்கட்டடத்தில் நேராகச் செல்லும் பாதையின் இருபுறங்களிலும் இரண்டு சிறிய

நடைபாதைகள் பிரிந்து செல்லும். புதியவர்கள் இதன் உள்ளே வந்தால் பாதை மாறிச் செல்ல நேரிடும். இதனால் எதிரிகளை எளிதில் தாக்கி அழித்துவிட முடியும். அத்தகு பாதுகாப்பு நுணுக்கத்துடன் கிருஷ்ணவிலாசம் கட்டப்பட்டுள்ளது.

தஞ்சை மராட்டியர்களின் ஆட்சிக் காலத்தின்போது தஞ்சாவூருக்கு வெளியே பிற இடங்களிலும் அரண்மனைகள் கட்டப்பட்டன. அமர்சிங் மன்னர் காலத்தில் கட்டப்பட்ட திருவிடை மருதூர் அரண்மனை, சரபோசி மன்னர் காலத்தில் கட்டப் பெற்ற திருவையாறு திவான் வாடா, தேவனாம்பட்டணம் அரண்மனை, அறந்தாங்கிக் கோட்டை, மனோரா கட்டடங்கள் இவர்களது கட்டடக்கலையின் ஆர்வத்தைக் காட்டுகின்றன. காவிரிக் கரை ஓரத்தில் யாளி வடிவ முகப்புத் தோற்றத்துடன் அமைக்கப்பட்டுள்ள திவான்வாடா தஞ்சைப் பகுதியின் தனித்துவமிக்க கலைப் படைப்பாகும். இதில் கட்டடக் கலையுடன் சிற்பக்கலை இணைந்து புதியதொரு கலைவடிவம் பெறுவதைக் காண முடிகின்றது.

இரண்டாம் சரபோசியின் மனைவியர்கள் தங்கியிருந்த மாளிகை 'கல்யாண மகால்' என்றழைக்கப்பட்டது. இது கி.பி. 1824-ல் கட்டப்பட்டது. இதில் 23 பேர் அரசு மரியாதையுடன் வாழ்ந்து வந்துள்ளனர். இக் கட்டடத்தின் ஒரு பகுதியில் அச்சுக்கூடமும் நாணய வாரியமும் இருந்துள்ளன. திருவையாறு காவிரிக் கரையில் படித்துறையுடன் உயர்ந்த பல அடுக்குகளையும் மூன்று பிதுக்கத் தோற்றத்துடனும் நிமிர்ந்து நிற்கும் இக்கட்டடம் காண்போரை மகிழ்வூட்டும்.

திருவையாற்றிலுள்ள கல்யாண மகால் போன்று தஞ்சை அரண்மனைப் பகுதியில் கட்டப்பெற்ற மாளிகை 'மங்கள விலாஸ்' என்பதாகும். இது 'மங்களவாசகம்' என்றும் அழைக்கப்படும். இங்கு 42 அரசகுடும்பப் பெண்கள் இருந்துள்ளனர். இவர்களில் சிலர் நடன மகளிர். இக்கட்டடம் மொகலாயர், இந்து-ஐரோப்பியக் கட்டடக் கலையின் கூட்டு வடிவமைப்பாகவுள்ளது.

தஞ்சாவூர் அரண்மனையைச் சுற்றியுள்ள நான்கு இராஜ வீதிகளிலும் ஆங்கிலேயர்களின் திட்ட உதவியுடன் புதிய கட்டடங்கள் பல எழுப்பப்பட்டன. பாரீஸ் நகரிலுள்ளவாறு தஞ்சை நகரமைப்பும், கட்டடங்களும் அமைந்திட வேண்டும் என்று இரண்டாம் சரபோசி மன்னர் விரும்பினார். குடிநீர்க் குழாய்கள் கோட்டையில் அமைக்கப்பட்டன. கழிவு நீர்ப் பாதைகள் தனித்துறை அமைத்துக் கண்காணிக்கப்பட்டது. 'ஜலசூத்திரகாரி'

என்பவர் வெளிநாட்டிலிருந்து வந்து தஞ்சை அரண்மனையில் தங்கியிருந்து தண்ணீர்க் குழாய், வாய்க்கால், இயந்திரக் கிணறு போன்றவற்றை அமைத்துக் கொடுத்துள்ளார் என்பதை மோடி ஆவணம் கூறுகின்றது.

நீடாமங்கலம், ஒரத்தநாடு சத்திரங்கள் சரபோசி மன்னரின் காலத்தில் கட்டடப்பட்டவை. ஒரத்தநாடு சத்திரம் முக்தாம்பாள் சத்திரம் என்று அழைக்கப்படுகின்றது. முக்தாம்பாள் என்பவர் சரபோசியின் விருப்பத்திற்குரிய பெண்ணாக விளங்கியவர். முக்தாம்பாள் தாம் இறக்கும் பொழுது தம் பெயரில் ஒரு அன்ன சத்திரம் ஏற்படுத்த வேண்டும் என்று அரசரை வேண்டிக் கொண்டார். சரபோசி அவரது வேண்டுகோட்கிணங்க இச் சத்திரத்தைக் கட்டினார். இச்சத்திரம் பின்னர் மேலை நாட்டுக் கல்வி முறை சார்ந்த நிறுவனமாக மாறியது. இங்குள்ள முகப்பு மண்டபம், குதிரை பூட்டிய ரதம் போன்று அமைக்கப்பட்டுள்ளது. இதன் அடிப்பகுதி கற்களாலும் மேற்பகுதி செங்கற்களாலும் கட்டடப்பட்டதாகும். அழகிய சிற்பங்கள் நிறைந்த இக்கட்டடம் மன்னர் சரபோசியின் கலை ஆர்வத்திற்குச் சிறந்ததொரு எடுத்துக்காட்டாகும். மன்னர் பிரதாப சிங்கின் மூன்றாவது மனைவியார் யமுனாம்பாள் என்பவராவர். இவரது பெயரில் யமுனாம்பாள் சத்திரம் 1761-ல் கட்டடப்பட்டதாகும். இச்சத்திரத்தின் முகப்புத்தோற்றம் அழகிய வேலைப்பாடு மிக்கது. இச்சத்திரங்கள் போன்றே இராஜகுமாராபாயி, இராச குமாராம்பா, மோகனாம்பாள், திரௌபதாம்பாள் என்னும் மராட்டிய அரசியர் களின் பெயர்களில் கலை அழகுடன் சத்திரங்களைக் கட்டியுள்ளனர்.

பட்டுக்கோட்டைக்கு அருகே சாளுவநாயக்கன் பட்டினம் என்னும் இடத்திலுள்ள மனோராக்கட்டடம் மராட்டியர் கட்டடக்கலைத் திறனுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது. இக்கட்டடம் ஐரோப்பாவில் நெப்போலியன் தோல்வியுற்றதை அறிந்து மகிழ்ந்து அதன் நினைவாகக் கட்டப்பட்ட தூணாகும். இங்கு தமிழ், ஆங்கிலம், உருது, மராட்டி, தெலுங்கு ஆகிய மொழிகளில் கல்வெட்டுக்களுள்ளன. அறுகோணத் தளவடிவமைப்புடைய கோட்டையின் நடுவில் 23.3 மீ உயரமுள்ள ஒன்பது அடுக்குகள் கொண்ட மையப் பகுதி கட்டடத்துடன் வடிவமைக்கப்பட்டுள்ளது. இங்கு அகழி, கற்கோட்டைச்சுவர், இரகசிய அறைகள், வணிகப் பொருட்களைச் சேமித்து வைப்பதற்குரிய அறைகள், இராணுவப் பயிற்சிக்குரிய இடம், கப்பல் கட்டும் தளம், கப்பல் மற்றும் இராணுவப் பயிற்சிக்குரிய நூலகம் இருந்தன. இவற்றில் சில இடங்கள் சிதைந்துவிட்டன.

கோட்டையையும் அதன் அகத்தேயுள்ள உயர்ந்த மாடத்தையும் இன்றும் கண்டு மகிழ முடிகின்றது. இக்கட்டடம் கலங்கரை விளக்கமாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இலங்கை, சுமத்திரா, சாலமன் தீவு போன்ற இடங்களுக்குக் கப்பல்கள் செல்வதும் அங்கிருந்து இங்கு வருவதும் அக்கால கட்டத்தில் சிறப்படைந்துள்ளது எனக் கூறலாம்.

### தங்கும் மாளிகைகள்

சரபோசி மன்னரின் ஆட்சியின்போது தஞ்சைக் கோட்டை மட்டுமல்லாது அவரது ஆட்சிக்குட்பட்ட தஞ்சை மாவட்டத்தின் பிற இடங்களிலும் அரண்மனைக்குரிய கட்டடங்களை அவரே கட்டியுள்ளார். இக்கட்டடங்கள் அமைந்துள்ள இடங்களின் தன்மையைக் காணும்பொழுது, அவை,

1. தோட்ட மாளிகைகள்
2. வேட்டை மாளிகைகள்
3. நிர்வாக மாளிகைகள்
4. சத்திரங்கள்

எனப் பிரித்துக் காணுமாறு அமைகின்றன.

தோட்ட மாளிகைகள் என்பன அரண்மனையின் உரிமைக்குரிய காடுகளில் வேளாண் தோட்டங்களில் கோட்டைக்குள் இல்லாத பிற இடங்களில் கட்டப்படும் கட்டடங்களாகும். இங்கு உப்பரிகைகளையும், தங்கும் இல்லங்களையும், குதிரை, யானைகளைக் கட்டக்கூடிய லாயங்களையும் கட்டியுள்ளனர். வேட்டை மாளிகைகள் என்பன அடர்ந்த காட்டுப் பகுதிகளில் வேட்டைக்குச் சென்று வருவதற்கும் இரவு நேரங்களில் தங்குவதற்கும் பயன்படக்கூடிய வகையில் அமைவதாகும். ஏனெனில், மன்னர் சரபோசியின் ஆட்சிக்காலத்தில் வேட்டைக்குச் செல்லும் ஒரு பிரிவினர் அரண்மனையில் இருந்துள்ளனர். இவர்கள் மன்னருடன் சென்று வருவது வழக்கம்; இவர்களுக்குத் தனியே கூலியும் வழங்கப்பட்டது என்பதை மோடி ஆவணங்கள் குறிக்கின்றன. இவ்வாறு அமைகின்ற இடங்களில் கட்டப்படும் கட்டடம் 'வேட்டை மால்' என்றழைக்கப்பட்டது. இதற்குச் சிறந்த சான்றுகளாக நீலகிரி வேட்டை மால், கோடியக்கரை வேட்டை மால் ஆகியவற்றைக் கூறலாம். நிர்வாகக் கட்டடங்கள் அரண்மனையிலும், பிற இடங்களிலும் செயல் பெற்று வந்தன எனக் கூறலாம். சத்திரங்கள், அன்னதானச் சத்திரங்கள் என்பன பொதுமக்களுக்கும், வழிபாட்டுத் தலங்களுக்குச் சென்றுவரும் பக்தர்களுக்கும் உதவுமாறு உணவு, உடை, தங்கும் வசதிகளுடன் கூடிய கல்வி நிலையங்களாகவும் செயல்பட்டுள்ளன என்பதை

மோடி ஆவணங்கள் கூறுகின்றன. தஞ்சை மராட்டியரின் மோடி ஆவணக்குறிப்பு ஒன்று மராட்டியர் காலத்தில் (14.10.1838) பதினைந்து சத்திரங்கள் இருந்தன என்றும் அவை அரண்மனையின் கட்டுப்பாட்டில் நிர்வகிக்கப் பட்டன என்றும் கூறுகிறது. இராஜகுமராம்பா பாய் சத்திரம், சக்குவாரம்பா பாய் சத்திரம், மோகனாம்பாள் சத்திரம், தர்மபாதாம்பாள் சத்திரம், யமுனாம்பாள் சத்திரம், சைதாம்பாய் சத்திரம், அரசூர் சத்திரம், இலட்சுமி இராஜபுரம் சத்திரம், தில்லைஸ்தான சத்திரம் முதலியன கட்டப்பட்டன. இவை அனைத்தும் மராட்டியர் காலத்தில் கட்டப் பட்டாலும் இன்றும் பொது மக்களுக்குப் பயன்பட்டு வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும். மன்னர் இரண்டாம் சரபோசியின் காலத்திற்கு முன்னரே கட்டப்பட்ட பல சத்திரங்கள் சரபோசியின் ஆட்சியின்போது செப்பனிடப்பட்டுப் பாதுகாக்கப்பட்டன என்பது சிறப்பாகும்.

## குடியேற்றங்கள்

தஞ்சை நாயக்கர்களின் ஆட்சிக்குப் பின்னர்த் தஞ்சையைக் கைப்பற்றி ஆட்சி செய்த மராட்டியர்களின் காலத்தில் புதிய புதிய குடியிருப்புக்களும் அரசு கட்டடங்களும் தோன்றின. இப்புதிய எழுச்சியின் காரணமாகப் போக்குவரத்து வசதிகளும் ஏற்படுத்தப்பட்டன. இத்தகைய வளர்ச்சிக்கு முக்கிய காரணமாகத் திகழ்ந்தவர் மன்னர் இரண்டாம் சரபோசி. இவர் காலத்தில் புதிய குடியிருப்புக்களாக, பண்டாரவாடைகள், தட்டி மால்கள், உப்பரிகைகள், படித்துறைகள், பாலங்கள், அரண்மனை நிர்வாகத்திற்குட்பட்ட பங்களாக்கள், சத்திரங்கள், மண்டபங்கள், அக்கிரகாரங்கள், சேரிகள், தோட்டக் கட்டடங்கள் கட்டப்பட்டன. நகர, கிராம வளர்ச்சியில் மன்னர் சரபோசியின் ஈடுபாடு இன்றும் அவர் புகழைப் பரப்பி வருகின்றது. எனவே, மராட்டிய மன்னவர் களிடையே கல்வி, கலை ஆகிய இரண்டிலும் ஆங்கிலேயரும் புகழுமாறு தன்னை ஈடுபடுத்திக் கொண்ட இரண்டாம் சரபோசி மன்னரின் கட்டடங்கள், குடியிருப்புக்கள் இவண் குறிப்பிடத் தக்கன. இவை, மராட்டியர் காலக் கட்டடக்கலை, நகரிய வளர்ச்சியைப் புலப்படுத்துவனவாகவுள்ளன.

## பொதுப்பணித்துறை வாரியம்

மன்னர் இரண்டாம் சரபோசியின் ஆட்சியின்போது பல்வேறு நிர்வாகப்பிரிவுகள் ஏற்படுத்தப்பட்டன. அவை ஒவ்வொன்றும் தனித்தனிப் பிரிவுகளாகச் செயல்பட்டன என்பதை மராட்டியர் கால மோடி ஆவணங்கள் குறிப்பிடுகின்றன. தஞ்சை அரண்மனையில்

கட்டடங்கள், சாலை, குடிநீர் மற்றும் சுகாதாரம் ஆகியவற்றைப் பேணிப் பாதுகாக்கத் தனித்தனியே பொதுப்பணித்துறை அலுவலகங்கள் அமைந்திருந்தன. அரசாங்கக் கட்டடங்கள், அரசு கட்டிக்கொடுக்கும் கிராமக் குடியிருப்புக்கள் மற்றும் அரசு நிர்வாகத்தில் பணிபுரியும் நிர்வாக அலுவலர்களின் வீடுகளுக்கும் இத்துறையின் வாயிலாக கட்டுமானப் பொருட்கள் அளிக்கப் பட்டுள்ளன. செங்கல், செம்பராங்கல், மூங்கில், கீற்று, மரங்கள், மரத்தூண்கள், வண்ணம், ஆகிய இவற்றோடு இப்பணியைச் செய்யும் கொத்தர்களும் அரண்மனை வாரியத்திலிருந்து அனுப்பி வைக்கப்பட்டுள்ளனர். திருப்பூந்துருத்தியில் அரசு அலுவலகத்தில் பணிபுரிந்த அலுவலர் ஒருவருக்கு வீடுகட்ட மரத் தூண்களும், மரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. அக்கிரகாரங்கள், படுகைகள், சேரிகள் முறையாகத் திட்டமிடப்பட்டுள்ளன என்பதை அக்காலத்திய வரைவுகள் எடுத்துரைக்கின்றன. தஞ்சை நகரில் மட்டும் இத்துறையினர் கோட்டையின் குடிநீர் வசதி (ஜலசூத்திரம்), தெருச்சாக்கடை, தெரு, விளக்கு, சுகாதாரம் போன்றவற்றை மேற்கொண்டிருந்தனர் என்பதை மோடி ஆவணங்கள் எடுத்தியம்புகின்றன.

சரபோசியின் ஆட்சிக்கு உதவியாக இருந்த ஆங்கிலக் கம்பெனியரின் வருகைக்குப் பின்னர் தஞ்சை நகரமைப்பு, நிர்வாகத்தில் கம்பெனியின் செல்வாக்கு அதிகரித்துள்ளது என்பதையும் இதனை மன்னர் சரபோசி விரும்பாமல் மிகவும் கவலையடைந்த செய்திகளையும் மோடி ஆவணங்கள் கூறுகின்றன. இருப்பினும் மன்னரின் ஒப்புதலுடனே கட்டுமான வேலைகள் நடைபெற்றுள்ளன. அதன்பின்னர் ஆங்கிலேயப் பொறியாளர்கள், கட்டடக் கலைஞர்களின் துணையுடன் புதிய கட்டடங்கள் தஞ்சை நகரில் தோன்றின. அவை மேலை நாட்டுக் கட்டடக் கலையைச் சார்ந்தே கட்டப்பட்டன. தஞ்சை நகரின் நான்கு வீதிகளிலும் இத்தகைய கட்டடங்கள் தோன்றின. நாயக்கர் காலத்திய கட்டடங்கள் அழிக்கப்பட்டு புதிய குடியிருப்புக்களும் பிற பயன்பாட்டிற்குரிய இடங்களாகவும் மாற்றம் அடைந்தன. தொன்மையான கட்டடங்களாக இருப்பினும், அவை சுதைப்பூச்சு, அலங்கார வேலைப்பாடு என்ற நிலையில் மேலை நாட்டவரின் மனச்சூழ்நிலைகளுக்கு ஏற்ப மாற்றம் அடைந்தன. நகரமைப்புக் களில் ஏற்பட்ட மாற்றங்களைப் போன்றே சாலைப் போக்குவரத்துக் களிலும் குளங்களின் அமைப்புக்களிலும் ஏற்பட்டன. இம்மாற்றமே தஞ்சை மாவட்டத்தின் போக்குவரத்து வசதியை ஏற்படுத்திக் கொடுத்தது. இப்பணியின் காரணத்தினால்தான் தஞ்சை நகரம்

"தென்னகத்தின் பாரீஸ் நகரம்" என்று அழைக்கக் காரணமாகவும் அமைந்தது. எனவே, மன்னர் சரபோசியின் காலத்தில் தோன்றிய பொதுப்பணித்துறையின் பணி மரபு நிலையில் தொடங்கிப் பின்னர் காலனி ஆதிக்கத்தின் கீழ் காலனிக் கலாச்சார அமைப்பைப் பெறத் தொடங்கியது. ஆங்கிலேயர்-இந்தியர் கட்டடக் கலையின் கூட்டு வடிவமாகி மரபுநிலை மாற்றம் பெற்றுக் "காலனிக்கட்டடக்கலை" வடிவம் பெற்றுத் திகழ்கின்றன எனக் கூறலாம். இம்மறுமலர்ச்சிக்கு வித்திட்டவர் மன்னர் இரண்டாம் சரபோசி ஆவார்.

## குடியிருப்புக்கள்

இரண்டாம் சரபோசியின் காலத்தில் வேளாண்மை, வணிகம் சிறப்படைந்தன. பல்வேறு கோயில்களைக் கட்டிய இவர் இக்கோயில்கள் திறம்படச் செயல்பட பிராமணர்களைக் குடியமர்த்தியும் அவர்களுக்கு நிலம், வீடுகள் அமைத்தும் கொடுத்தார். இப்பணியே புதிய அக்கிரகாரங்கள் தோன்றக் காரணமாகியது. சரபோசியின் காலத்தில் தோன்றிய அக்கிரகாரங்களில் கணபதி அக்கிரகாரம், பள்ளி அக்கிரகாரம், திருவாடி அக்கிரகாரம், கும்பகோணம் அக்கிரகாரம், மெலட்டூர் அக்கிரகாரம், வெண்ணாற்றங்கரை அக்கிரகாரம் போன்றவை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவையாகும். இந்த அக்கிரகாரங்கள் பொதுவாக நீண்ட தெருக்களையும் குறைந்தஅளவு உயரமுள்ள வட்டத்தூண்களுடன் கூடிய திண்ணையையும் பெற்றுள்ளன. இவ்வடிவமைப்புடைய கட்டடங்கள் அதிக உயரமில்லாமலும் செங்கல் சுண்ணாம்பு முதலியவற்றால் அமைக்கப்பட்டிருக்கின்றன. இவற்றில் சில இரண்டு அங்கணமாகவும் அவற்றின் பின்பகுதி பூக்கொல்லைகளுடனும் உள்ளன. மேற்கூரையாகிய விதானம் அரை வளைவு கூரையாகவும் திண்ணையைத் தொடர்ந்து வரும் வீட்டுப்பகுதியின் நான்குபுறத்திலும் தூண்களுடன் கூடிய அறைகளுடன், சில இடங்களில் இவ்வமைப்பு இல்லாமலும் இருக்கின்றன. ஆனால் முற்றம் வடிவமைப்புடைய வீடுகள் அதிகம் இடம் பெறுகின்றன. இக்கட்டட வடிவமைப்புக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திருவையாறு அக்கிரகாரங்களைக் கூறலாம். சிறிய அளவில் அமைந்த மரத்தூண்களுடன் கூடிய திண்ணையும் ஓடு வேயப்பெற்ற கூரையுடைய வீடுகளும் இந்த வகை அக்கிரகாரத் தெருக்களும் உள்ளன. இத்தகைய வீடுகளுக்கு கணபதி அக்கிரகாரம், திருவையாறு அக்கிரகாரம், மெலட்டூர் அக்கிரகாரம் போன்றவற்றைக் கூறலாம். இவ்வீடுகளின் அமைப்பு முறை நமது மரபு வழி வந்தவையாகும். ஆனால் திருவையாற்றில் உள்ள பல கட்டடங்கள் மராட்டியர் கலைப்பாணியைப் பின்பற்றியதாகும்.

எனவே, சரபோசியின் காலத்தில் தமிழக மரபு நிலையிலும் மராட்டியக் கலைப்பாணியிலும் அக்கிரகாரங்கள் கட்டப்பட்டுள்ளன. மேலும், தெருக்கள் திட்டமிடப்பெற்று வரைபடங்கள் பெற்றே அமைக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### அரசர் பெயரில் ஊர்கள்

மன்னர் சரபோசியின் காலத்தில் புதிய குடியிருப்புக்கள் அரசு நிர்வாகப் பணியின் காரணமாகக் கட்டப்பட்டுள்ளன. மன்னர்கள், அரசிகள், பிற அரசுத் தலைவர்களின் பெயர்கள் இக்குடியிருப்புக் களுக்குச் சூட்டப்பட்டுள்ளன. அரசர்களுக்குரிய கட்டடங்களைக் கொண்ட குடியிருப்புக்களில் பொதுவாக, நிலவரி, தானியச் சேமிப்பு அல்லது வசூலித்தல், அரசு நிர்வாகிகள் தங்குதல் பிற அதிகாரிகளின் குடும்பங்கள் குடியமர்த்தப்பட்டுள்ளன எனலாம். இவ்வாறு அமையும் குடியிருப்புக்கள், பண்டாரவாடை, புரம், மங்கலம், சத்திரம் அரண்மனைத் தோட்டம் போன்ற பெயர் தாங்கியும் உள்ளன. இவ்வாறு அமைக்கப்பெற்ற குடியிருப்புக்களுடைய ஊர்களாக, திருவிசைநல்லூர் பண்டார வாடை, பண்டாரவாடைப் பெரும்பாண்டி, பண்டாரவாடை சரபேந்திர ராஜபட்டினம், சரபோசியபுரம், யமுனாம்பாள்புரம், சேதுபாவாசத்திரம், ஆவுசாயபுரம், இனாத்கான்பட்டி போன்றவை குறிப்பிடத்தக்கன. இக்குடியிருப்புக்களின் கட்டடங்களுக்கு அரசுப் பணமும் அரசுப் பொதுப்பணித்துறையின் மேற்பார்வையும் இருந்தன என்பதை மோடி ஆவணங்கள் காட்டுகின்றன. எனவே, மராட்டியர் ஆட்சிக் காலத்தில் கிராமங்களில் அரசுக் கட்டடங்கள் பல கட்டப்பட்டன என்பது வரலாற்றில் குறிக்கப்படும் சிறப்புச் செய்தியாகும்.

அரசர்களுக்கென்று ஒரு அரண்மனை தலைநகரில் இருப்பினும் சரபோசியின் காலத்தில் தஞ்சாவூர், திருவையாறு, சரபேந்திரராசபட்டினம், மகாதேவபட்டினம் போன்ற இடங்களிலும், நீடாமங்கலத்திலும் தங்கும் வசதியுடன் கட்டடங்களையும் கட்டியுள்ளனர். இப்பணியின் காரணமாகப் பல்வேறு இடங்கள் நகரமாகவும், கலாச்சார மையமாகவும் இன்றும் திகழ்கின்றன. இப்புகழ் பெறுவதற்குப் பெரும் உதவியாக இருந்தவர் மன்னர் சரபோசி ஆவார்.

மராட்டியர் காலத்தில் ஏற்பட்ட மற்றொரு கட்டடக்கலைப் பாணி படித்துறைகளாகும். சமயச் சடங்குகளையும் வழிபாடுகளையும் செய்வதற்குரிய புனிதத்தலமாக ஆறு, குளம்,

கடல், மலை போன்ற இடங்களைக் கருதினர். கங்கைக் கரையில் ஓங்கி உயர்ந்து நிற்கும் படித்துறைகளைப் போன்றே பஞ்ச நதிகளின் கரைகளில் படித்துறைகள் கட்டப்பட்டன. புனித கங்கைக்கு இணையாகத் திருவையாறு காவிரி போற்றப்பட்டது. காசியைப் போன்று இருநூறுக்கும் மேற்பட்ட சத்திரங்களும் இருபதுக்கும் மேற்பட்ட படித்துறைகளும் உள்ளன. மராட்டியர் காலத்தில் வாழ்ந்த குஜராத்தியர்களும் சில மடங்களையும் படித்துறைகளையும் கட்டியுள்ளனர். இது தஞ்சாவூருக்கும், குஜராத்தியர்களுக்கும் இடையே ஏற்பட்ட அந்நாளைய வணிகத் தொடர்பைக் காட்டுகின்றது.

தமிழகத்தில் 18-ஆம் நூற்றாண்டில் ஆறுகளைக் கடந்து செல்வதற்குரிய பாலங்கள் இல்லை. இந்தக் காலகட்டத்தில் பொது மக்களின் நன்மைக்காகப் பல்வேறு பாலங்களைக் கட்டிய நற்பேறு மராட்டிய மன்னர் துளஜா, இரண்டாம் சரபோசி ஆகியோருக்கே உரியதாகும். தஞ்சாவூரிலிருந்து திருவையாற்றுக்குச் செல்லும் வழியில் இருக்கும் வெண்ணாற்றுப் பாலம், குடமுருட்டிப் பாலம், வெட்டாற்றுப் பாலம், திருவையாற்றுப் பாலம், கல்லணை சீரமைப்பு போன்றவை இவர்களது பொதுப்பணித்துறையின் சிறப்பினையும் கட்டடக்கலை வளர்ச்சியையும் காட்டும் சிறந்த சான்றுகளாகத் திகழ்கின்றன. இப்பாலங்களை, நாணல்களை வளர்த்தும், யானைகளை நிறுத்தியும், தண்ணீரின் திசை திருப்பியும் கட்டிய திறன் பாராட்டுதற்குரியது. தஞ்சை மராட்டியரின் இத்தகைய அரிய செயல் திறனால் தஞ்சையின் வரலாறு மேலும் புகழ்பெறுகின்றது. இத்தகு சிறப்புப் பெறுவதற்குப் பெரிதும் உதவியவர்கள் தஞ்சை மராட்டிய மன்னர்கள் என்று கூறுவது மிகையன்று.

# வரலாற்றில் சாளுவநாயக்கன் பட்டினம்

சாளுவநாயக்கன்பட்டினம், தஞ்சை மாவட்டம், பட்டுக்கோட்டையிலிருந்து தெற்கே புதுப்பட்டனத்திற்கும் சேதுபாவா சத்திரத்திற்குமிடையே அமைந்துள்ளது. இவ்வூர் 'சரபேந்திரராஜபட்டினம்' என்றும் அழைக்கப்படும். சரபேந்திரராஜா என்னும் பெயர் மன்னன் இரண்டாம் சரபோசியைச் சாரும். சைவ சமயத்தில் ஆழ்ந்த பற்றும் ஈடுபாடும் கொண்ட மன்னர் என்பதால் சரபேந்திரர் என்ற பெயர் பெற்றார். இச்சிறப்புப் பெயரின் அடிப்படையிலேயே சரபேந்திரராஜபட்டினம் என்று பெயரிட்டு அழைக்கப்பட்டது.

சரபேந்திரராஜபட்டினத்திற்கு 'துலுக்கன்வயல்' 'சாளுவ நாயக்கன்பட்டினம்' என்னும் பெயர்களும் உண்டு. சாளுவநாயக்கன் பட்டினம் என்ற பெயரை மிகவும் பழமையானதாகக் கருதலாம். தஞ்சை நாயக்கர் காலத்தில் சாளுவநாயக்கன்பட்டினம் கடல்வழித் தடமாகவும் வணிகத் தொடர்புடைய துறைமுகமாகவும் இருந்திருக்க வேண்டும். ஏனெனில் சாளுவ தேசம் சென்று போரிட்டு வந்த வீரர்களுக்குப் பட்டப் பெயராகவும் இருந்துள்ளது எனக் கூறலாம். நாயக்கன் என்பதற்குத் தலைவன், நடத்திச் செல்லும் முதன்மையானவன் என்ற பொருளும் காண முடிகின்றது. எனவே நாயக்கன் என்ற சொல் தெலுங்கு மொழி பேசும் மக்களின் ஒரு பகுதியினரைக் குறித்தாலும், தஞ்சை மாவட்டத்தில் வாழ்கின்ற கள்ளர் வகுப்பினருக்கும் சாளுவர் என்ற பட்டமும், நாயக்கர் என்ற பட்டப் பெயர்களும் உண்டு என்பது இங்கு குறிப்பிடத்தக்கதாகும். இப்பெயர் பற்றிய கருத்துக்கள் எவ்வாறு இருப்பினும் சாளுவநாயக்கன் பட்டினம் என்ற பெயர் நாயக்கரின் ஆட்சிக் காலத்தில் வழக்கத்தில் இருந்திருக்க வேண்டும். தஞ்சை நாயக்கரின் ஆட்சிக்காலத்தில் தரங்கம்பாடி, நாகை போன்ற இடங்களே சிறப்புப் பெற்றிருந்தன. ஆனால் சாளுவநாயக்கன் பட்டினம் என்ற பெயர் பெற்ற துறைமுகப்பட்டினம் பற்றிய எந்தவொரு வரலாற்றுச் சான்றும் அவர்கள் காலத்தில் கிடைக்கப் பெறவில்லை. இருப்பினும், இத்துறைமுகப்பட்டினம் கோனேரிராயன் காலத்தில் சிறப்பிடம் பெற்றிருக்கக் கூடும். இம்மன்னன் பாண்டியர்களுடன் தொடர்புடையவன் என்பதாலும் இத்துறைமுகப்பட்டினம் பாண்டிய நாட்டு எல்லைக்கு அருகே அமைந்திருப்பதாலும் சாளுவநாயக்கன் பட்டினம் மன்னன் கோனேரிராயன்

ஆட்சிக்காலத்தில் சிறப்புப் பெற்றிருக்க வேண்டும் எனக் கருதலாம். ஆனால் இதுகுறித்து மேலும் ஆய்வது இந்த ஊர்ப் பெயரின் வரலாற்றை இன்னும் தெளிவாக்கக்கூடும்.

'துலுக்கன் வயல்' என்ற சொல் இப்பகுதியில் குடியேறிய கடல் வணிகம் செய்கின்ற முகமதிய மக்கள் வாழ்ந்த ஊரைக் குறித்த பெயர். இவர்களைச் சோணகர்கள் என்றும் அழைப்பர். சோழ மண்டலத்தின் கடற்கரை ஓரமாகக் குடியேறிய மக்களில் முகமதியர் அதிகம் எனக் கூறலாம். நாகூர், நாகை, அதிராம்பட்டினம் போன்ற இடங்களை இதற்குச் சான்றாகக் கூறலாம். எனவே, இப்பகுதியில் இசுலாமிய மக்கள் வாழ்ந்து வந்தனர் என்பதும் இப்பெயரின் வாயிலாக அறிய முடிகின்றது.

'மனோரா' என்று அழைக்கப்படும் தற்கால வழக்கில் உள்ள பெயர், அக்கட்டடத்தின் பெயரால் ஏற்பட்டதாகக் கூறலாம். 'மனோரா' என்ற சொல் வழக்கும் பிற்காலத்தில் வந்ததாகும். ஏனெனில் 'மனோரா' என்ற பெயர் மராட்டிய மன்னர்களின் மோடி ஆவணங்களில் குறிக்கப்படவில்லை. எனவே, மனோரா என்ற பெயர் மராட்டிய மக்களின் சொல் வழக்கில் இடம் பெற்றதாகக் கருதலாம். மனோரா என்னும் பெயர் 'மினாராட்' என்ற சொல்லின் திரிபாகக் கருதலாம். 'மினாராட்' என்னும் சொல்லிற்கு நிலைமாடம் என்ற பொருளும் உண்டு. 'மனோகரமான' என்ற சொல் வழக்கும் உண்டு. இதற்கு 'மனதைக் கவர்ந்த' 'மனோஹர' என்ற பொருளும் அமைகின்றது. பல நிலைகளைக் கொண்ட உயர்ந்த கட்டடமாக இருப்பதால் இதற்கு மராட்டியர்கள் 'மனோரா' என்று பெயரிட்டழைத்தனர் எனவும் கருதலாம். எனவே, மனோரா என்ற பெயர் கட்டடத்திற்குரிய பெயர் என்ற அளவிலேயே அமைகின்றது. அது இடத்தின் பெயரைக் குறிக்கவில்லை. இருப்பினும் நாகூரில் கட்டப்பெற்ற புறாக்கூடு வடிவமைப்புடைய கட்டடம் 'மினாரட்' என்று குறிப்பிடப்படுகிறது. எனவே, மராட்டிய மன்னன் பிரதாப் சிங் இக்கட்டட வடிவமைப்பு முறைக்கு வழி வகுத்தவன் என்றும்; 'மினாரட்' என்ற சொல்லின் திரிபாக 'மனோரா' என்று பெயர் பெற்றது எனக் கருத வாய்ப்பாக அமைகின்றது.

சாளுவநாயக்கன்பட்டினத்திற்குரிய, துலுக்கன்வயல், மனோரா, சரபேந்திரராஜபட்டினம் ஆகிய பெயர்களில் துலுக்கன் வயல் என்ற பெயர் அதிகம் இடம் பெறவில்லை. மனோரா என்ற பெயர் தற்காலத்தில் இக் கட்டடத்திற்கு மட்டுமே உள்ளதாகக்

கருதலாம். சாளுவநாயக்கன்பட்டினம் என்ற பெயர் தொன்மையான பெயர் என்பது தெளிவு. சரபேந்திரராஜபட்டினம் என்ற பெயர் மராட்டியர் காலத்தில் ஏற்பட்டாலும் இவ்வூர் தொடர்ந்து சாளுவநாயக்கன்பட்டினம் என்றே அழைக்கப்பட்டு வந்துள்ளது என்பதை மராட்டியரின் மோடி ஆவணங்கள் எடுத்துக்காட்டுகின்றன. ஆனால் 1805-ஆம் ஆண்டினைச் சேர்ந்த மோடி ஆவணக் குறிப்பிலும் (1746), 1824-ஆம் ஆண்டின் மோடி ஆவணக்குறிப்பிலும் தத்தோஜி அப்பாவுக்கு கும்பகோணத்தில் சுரோத்திரியம் (நிலக்கொடை)கொடுத்து அதற்கு 'சரபோஜிராஜபுரம்' என்று பெயரிடப்பெற்ற செய்தி அறிய முடிகிறது. அதன்பிறகு 1836-ஆம் ஆண்டில்தான் சரபேந்திரராஜபட்டனம் என்ற பெயர் குறிக்கப்பெற்ற மோடி ஆவணம் கிடைக்கின்றது. (10 - 76). எனவே, மனோரா அமைந்துள்ள இடமாகிய சாளுவநாயக்கன்பட்டினம் 1836-ஆம் ஆண்டில் சரபேந்திரராஜபட்டினம் என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும். இருப்பினும், சாளுவநாயக்கன் பட்டினம் என்ற பெயரிலேயே தொடர்ந்து இருந்தமையை 1844-ஆம் ஆண்டு மோடி ஆவணக் குறிப்பு உறுதி செய்கின்றது.

**சாளுவநாயக்கன்பட்டினம் துறைமுகம்**

சாளுவநாயக்கன்பட்டினம் கடல்வழிப் போக்குவரத்திற்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கப்பட்டதற்குக் காரணம் ஐரோப்பியர்களின் கடல் வணிகமேயாகும். கடல் வழித் தடங்கள் இவர்களின் வியாபாரத்திற்கும் அரசியல் நிரந்தரப்படுத்துதலுக்கும் பின்புலங்களாகத் திகழ்ந்தன எனக் கருதலாம். ஏனெனில் துறைமுக நகரங்களே இவர்களின் முதல் அமைவிடமாக அமைந்தன. எனவே கடல் வணிகத்திற்கு ஏற்ப இடங்களை அமைப்பதும் அவர்களின் ஆட்சிக்கு உட்பட்ட பகுதியாக வைத்திருப்பதும் பொதுக் கூறாக கருதலாம். இக்கருத்துக்களுக்கும் மேல், அப்பகுதி மக்களின் பயன் பாட்டிலும் இயற்கை அமைப்பிலும் துணைபுரிவதாகவும் கடல் வழித்தொடர்பு இடங்கள் அமைகின்றன. இப்பகுதியில் தொன்று தொட்டு வாழ்ந்து வருகின்ற மீனவர்களின் கடல் பயணத்தின்போது சாளுவ நாயக்கன்பட்டினம் அவர்களுக்கு திசையை அறிவிக்கும் மைய இடமாகும். இன்றும் இவர்களின் பழக்கத்தில் இந்த இடத்தைச் சுட்டிப் பேசுவதும், இதன் திசை அறிந்து பயணங்களை அமைப்பதும் வழக்கத்தில் இருந்து வருகின்றது.

ஐரோப்பிய வணிகக் கம்பெனியாரின் முதல் ஆதிக்கம் பெற்ற இடங்கள் பண்டையத் தமிழகத்தின் துறைமுக நகரங்களாகவே

அமைகின்றன. சங்ககாலம் தொட்டு தற்காலம் வரை வணிகக் குழுக்களின் வருகையும் வணிகத் தொடர்பால் ஏற்பட்ட ஏற்றுமதி இறக்குமதி பற்றிய செய்திகளையும் தமிழ் இலக்கியங்களும் கல்வெட்டுச் சான்றுகளும், வெளிநாட்டவர் குறிப்புகளும் உணர்த்துகின்றன. பண்டைய தமிழகத்தில் புகழ்பெற்ற அத்தகைய துறைமுகங்களாக காவிரிப்பூம்பட்டினம், கொற்கை ஆகியவை திகழ்ந்தன. காவிரிப்பூம்பட்டினம் சோழர்களின் ஆட்சிக்காலம் வரையிலும் மிகுந்த புகழ்பெற்றதையும் பின்னர் அது கடல்கொண்ட நிலையையும் அறிய முடிகின்றது. அவ்வாறே பாண்டிய நாட்டின் சிறப்பு மிக்க முத்துக்களையும் நறுமணப் பொருட்களையும் ஏற்றுமதி செய்த கொற்கைத் துறைமுகம் காலப்போக்கில் மறைந்த வரலாறும் அறியப்படுகின்றது. இதனை முதற்கட்டக் காலமாகக் கருதலாம். இரண்டாம் கட்டக் காலத்தில், சோழநாட்டில் நாகப்பட்டினம் துறைமுகம் முதன்மை பெறத் தொடங்கியது. பூம்புகார் துறைமுகம் அதன் இயற்கை அழிவால் செயல் இழந்தது. எனவே நாகப்பட்டினம் துறைமுகம் 10-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர்ச் சோழமண்டலத்தின் சிறப்பிற்குரிய இடமாகத் திகழ்ந்தது. நாயக்கர்களின் ஆட்சியின்போதும் அதன்பின்னர் சோழமண்டலத்தை ஆட்சிபுரிந்த மராட்டியர்களின் ஆட்சியின் போதும் நாகப்பட்டினம் புகழ்பெற்றுத் திகழ்ந்தது. பாண்டியமண்டலத்தில் கொற்கையின் புகழ் குன்றியது. ஆனால் பெரியபட்டினம், நாகூர், அழகன்குளம் கடல்வழி வணிகத் துறைமுகங்களாக வளர்ந்தன. பெரியபட்டினம் சீன நாட்டவரின் முக்கிய வருகைத் துறைமுக நகரமாகத் திகழ்ந்தது என்பதைத் தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறையின் அகழாய்வுகள் உறுதி செய்கின்றன. அழகன்குளம் தொல்லியல் சான்றுகள் இத்துறைமுகத்தின் தொன்மை வரலாற்றையும் யவனர்களின் குடியிருப்புக்கள் அங்கிருந்தன என்பதையும் வெளிக்காட்டி விட்டன. எனவே, ஐரோப்பியரின் வருகைக்கு முன்னரும் தமிழகக் கடற்கரைத் துறைமுகங்கள் புகழ் பெற்றுத் திகழ்ந்தன என்பதைத் தெளிவாகக் காண முடிகின்றது. ஐரோப்பியரின் வருகைக் காலம் ஒரு பெரும் வணிகப் போராட்டமாகவே இருந்துள்ளதாகக் கருதலாம். ஏனெனில் இவர்களின் வணிகத் தொடர்பிற்குக் கடல்வழியே வாய்ப்பாக இருந்துள்ளது. எனவே போர்ச்சுக்கீசியர், டேனீசியர், பிரெஞ்சுக்காரர், ஆங்கிலேயர் ஆகியோரின் வருகையும் அவர்களின் ஆட்சிக்கு உட்பட்ட இடங்களைத் தக்கவைத்துக் கொள்ள முனைந்த வரலாறும் இங்கு குறிப்பிடப்பட்டாக வேண்டும். ஏனெனில், இப்போராட்டமே சாளுவநாயக்கன்பட்டினம் சிறப்புப் பெறக் காரணமாக அமைந்தது.

சோழமண்டலத்தில் நுழைந்த முதல் வெளிநாட்டவர்கள் என்ற பெருமை போர்ச்சுக்கீசியரைச் சாரும். இவர்களின் முதல் வருகையின் போது நாகப்பட்டினத் துறைமுகத்தை அவர்களின் ஆதிக்கத்தில் வைத்துக் கொண்டனர். தஞ்சை நாயக்க மன்னர் விஜய இரகுநாதரின் ஆட்சியின் போது போர்ச்சுக்கீசியருக்கு தஞ்சை மன்னருக்கும் ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி நாகப்பட்டினம் போர்ச்சுக்கீசியரின் ஆதிக்கத்திற்குட்பட்டது. அதன் பின்னர் தமிழகத்திற்கு வந்த டென்மார்க் வணிகக் குழுவின் தலைவர் ஒவ்ஜெட் (OVE GEDDE) என்பவர் முயற்சியால் 1611-1620-இல் போர்ச்சுக்கீசியரை வெளியேற்ற மன்னரிடம் வேண்டினார். ஆனால், இவரின் முயற்சிக்கு விஜய இரகுநாதர் மறுத்து விட்டார். அதன் பின்னர் 'தரங்கம்பாடி' (பொறையாறு) துறைமுகம் 19.11.1620-இல் டேனிசுக்குக் கிடைத்தது. இவ்விரு ஒப்பந்தங்களும் போர்ச்சுக்கீசு மொழியிலும் ஒன்றும் தெலுங்கு மொழியில் மற்றொன்றுமாக எழுதப்பட்டுள்ளன. அவை தற்பொழுது கோபன்கேகன் நகரிலுள்ள தேசிய ஆவணக் காப்பகத்தில் இருக்கின்றன.

டேனிஸ், போர்ச்சுக்கீசியரின் வணிக ஆதிக்கம் சோழ மண்டலத்தில் ஏற்பட்டது. அதன்பின்னர் பிரெஞ்சுக்காரர்களின் ஆதிக்கம் நாகப்பட்டினம், காரைக்கால் பகுதியில் நிலைபெற்றன. தரங்கம்பாடி துறைமுக நகரமும் காலப்போக்கில் வளர்ச்சி குன்றியது. துறைமுகக் கட்டடங்களைக் கடல் கொண்டது. இக்காலக் கட்டத்தில் ஆங்கிலக் கம்பெனியரின் கடல்வழி ஆதிக்கம் பரவத் தொடங்கியது. சென்னைப்பட்டினம் தலைமையிடமாகத் திகழ்ந்தாலும் சோழமண்டலக் கடற்கரையின் மீது கவனம் சென்றது. இக்காலக்கட்டத்தில் பாண்டிச்சேரி, காரைக்கால் பகுதியும் நாகப்பட்டினம், தேவிபட்டினம் பகுதிகளும் சிறப்புப் பெற்றன. பாண்டிச்சேரி, காரைக்கால் பிரெஞ்சுக்காரர்களுக்கும், நாகப்பட்டினம், தேவிபட்டினம் ஆங்கிலக் கம்பெனியருக்கும் உரிமையுடையதாக விளங்கின. ஆங்கிலக் கம்பெனியரின் ரெசிடெண்டாகப் பணியாற்றிய டோரின் என்பவரது காலத்தில் மராட்டியரின் ஆட்சிக்குள்ளிருந்த சோழ மண்டலம் ஆங்கிலக் கம்பெனியரின் அதிகாரத்திற்கு வந்தது. தஞ்சைக் கோட்டை மட்டும் மன்னர் இரண்டாம் சரபோசியின் ஆட்சிக்கு உட்பட்டது. சாளுவ நாயக்கன்பட்டினம் இலங்கைக்குச் செல்லும் வழித்தடமாகவும் கீழ்ப் பகுதியான தேவிபட்டினம் தூத்துக்குடிப் பகுதிகளுக்குச் செல்லும் வழியின் மைய இடமாகவும் அமைந்ததால் இத்துறைமுகத்திற்கு ஆங்கிலேயர் முதன்மை அளித்தனர். எனவே, பிரெஞ்சுக்காரர்களின் வணிகம் மற்றும் பிற எதிர்ப்புக்களுக்கு ஈடு கொடுக்கும்

வண்ணமாகவும் தஞ்சைப் பகுதிக்குப் போக்குவரத்திற்கு ஏற்ற இடமாகவும் சாளுவ நாயக்கன்பட்டினம் அமைந்துள்ளதால் இத்துறைமுகப் பட்டினம் முதன்மை பெற்றது என்பது தெளிவு. ஆனால் மன்னர் பிரதாப்சிங் அவர்களின் ஆட்சியின்போது ஏற்பட்ட மாற்றங்களும் இராமநாதபுரம் மன்னர்களின் ஆதிக்கம், மருதுபாண்டியரின் பிரெஞ்சுத் தொடர்பும் மற்றொரு நிலை என்பதையும் நினைவில் கொள்ள வேண்டியுள்ளது. ஏனெனில் மருது சகோதரரின் ஆங்கிலேயர் எதிர்ப்பு முயற்சிக்கு உதவியாகப் பிரெஞ்சு நாட்டின் மாமன்னன் நெப்போலியன் தூதுவர்களை அனுப்பிய செய்தியும் கிடைக்கின்றது. எனவே, சோழமண்டலத்திலுள்ள கடற்கரைப்பட்டினங்களை அடுத்து சேதுபதி, மருது சகோதரரின் ஆதிக்கத்திலுள்ள பகுதிகள் இடம் பெறுகின்றன என்பதும் சாளுவ நாயக்கன்பட்டினத்தின் முதன்மைக்குக் காரணமாக அமைந்தது எனக் கருதலாம். ஆனால் மராட்டியரின் ஆட்சிக் காலத்தில் குறிப்பாக சத்ரபதி சிவாசி மகாராசா சாகேப் (1832-1855) அவர்களின் ஆட்சிக்காலத்தில் சாளுவநாயக்கன்பட்டினத்தில் மராட்டிய அரசின் கப்பல்கள் வணிகத்திற்காகப் பயன்படுத்தப்பட்டன என்பதை ஆவணங்கள் காட்டுகின்றன. எனவே, சாளுவநாயக்கன்பட்டினம் 1855-ஆம் ஆண்டுகளுக்கு உட்பட்ட காலத்தில் மிகச் சிறந்த துறைமுகமாகவும் திகழ்ந்திருந்தது என்பது வரலாறு கூறும் உண்மையாகும்.

# மனோரா கோட்டையின் அமைப்பு

ஆங்கிலேயர் நினைவுத்தூண்களை அமைப்பதிலும் நினைவுக் கட்டடங்கள் எழுப்புவதிலும் அதிக ஈடுபாடு உடையவர் என்பதைக் கட்டடக்கலை வரலாறு காட்டுகின்றது. இந்தியாவில் பல அடுக்குகளைக் கொண்ட உயரமான மாடங்களுடன் கூடிய கட்டடங்கள் மொகலாயர்களின் கட்டடப்பாணியில் சிறப்புடன் இடம் பெறுகின்றன. தமிழகத்தில் சங்ககாலம் தொட்டு மாடமாளிகைகளும் கூட கோபுரங்களும் எழுநிலை மாடங்களும் கட்டப்பட்டிருந்தன என்பதைச் சங்ககால இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. எனவே, உயரமான கட்டடங்கள் எழுப்புவது என்பது தொன்மையான வரலாற்றுப் பின்புலத்துடன் வளம்பெற்றுள்ளது. இதுபோன்றே மிகத் தொன்மையான காலம் தொட்டு, அரண்மனைகளில் கட்டப்படும் கட்டடங்களுக்கிடையே புறாக்கூடு கட்டுவது ஒரு மரபாகவே இருந்து வந்துள்ளது. கோயில் கட்டடங்களிலும் புறாக்கூடு வடிவமைப்பும், சிறப்பாக இடம் பெறுவது இங்கு குறிப்பிடத் தக்கதாகும். ஏனெனில் வாழ்விடக் கட்டடக்கலை அமைப்பாலும் (அரண்மனை, தோட்டம், கட்டடங்களின் மேல்பகுதி) கோயிலின் அமைப்பிலும் (கருவறை, கோபுரம், விமானம்) புறாக்கூடு அமைபபு முறை பின்பற்றப்பட்டு வந்துள்ளது என்பதைக் கட்டடக்கலை நூல்கள் குறிப்பிடுகின்றன.

**மாடம்**

கட்டடக்கலை நூல்களில் புறாக்கூடு என்பதற்கு கபோதிகா அல்லது கபேலாதபாலிகா எனப்பெயர்கள் சுட்டப்படுகின்றன. தமிழில் 'கபோதகம்' என்ற சொல்லாட்சி கட்டடக் கலையில் பயன்படுத்தப்படுகின்றது.

மராட்டியர் தங்களின் அரண்மனைக் கட்டடங்களில் புறாக் கூடுகளைக் கட்டியுள்ளனர். ஆனால் இவர்களின் கட்டடங்களைப் போன்று வேறு எங்கும் இப்பகுதியில் காணமுடியவில்லை. எனவே, புறாக்கூடு கட்டடக்கலை வடிவமைப்பை முதன் முதலில் தஞ்சைப் பகுதியில் மராட்டியர் காலக் கட்டங்களில்தான் காணமுடிகின்றது. இத்தகைய மாடங்களில் தங்குகின்ற புறாக்களை மாடப்புறாக்கள் என்று அழைக்கும் வழக்கம் இன்றும் நடைமுறையில் உள்ளது. இம்மாடங்களில் விழாக்காலங்களில் அகல்விளக்குகளை ஏற்றி வைத்து தீபதம்பமாக போற்றும் மரபும் இருந்துள்ளது. இவ்வழக்கம்

மராட்டிய மாநிலத்தில் இன்றும் நடைமுறையில் உள்ளது.

புறாக்கள் தங்குவதற்குரிய கபோத அமைப்பை திருவையாறு 'திவான்வாடா' என்று அழைக்கப்படும் அரண்மனைப் பகுதியில் கட்டப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. திருவையாறு அரண்மனைச் சுவரின்-நவாப் படித்துறையின் அருகேயும், திருவையாறு ஆற்றுப்பாலத்தின் படி அருகே அமைந்துள்ள சகாநாயக்கர் படித்துறைக் கட்டடத்தின் முன்பாகவும் புறாக்கூடு கட்டடங்கள் கட்டப்பெற்றுள்ளன. இங்கு கட்டப் பெற்றுள்ள புறாக்கூடு கட்டடங்கள் ஐந்து நிலைகளைக் கொண்டவை. இக்கட்டடங்களின் வடிவமைப்பு முறையானது அடித்தளம் முதல் அதன் மேற்பகுதி வரை அறுகோண வடிவமைப்புடையதாகத் திகழ்கின்றது. அறுகோண வடிவமைப்பு முறை இந்திய கட்டடக்கலை நூல்களில் இடம்பெறுவதும் இங்கு குறிப்பிடுவது சிறப்பாகும். ஏனெனில் அறுகோண வடிவம் என்பது முக்கோணத்தை இரட்டித்தால் அறுகோணமாகிறது. 1811-இல் மாடப்புறாக்களுக்குக் கட்டடம் கட்டிய செய்தியையும் அக்கட்டத்தைச் செப்பனிட்ட செய்தியையும் மராட்டியரின் மோடி ஆவணங்கள் குறிப்பிடுகின்றன. (58-31). புறாக்கூடு வடிவமைப்புடைய கட்டடங்களைக் கொண்ட இடம் நாகூர் தர்காவாகும்.

மராட்டிய மன்னன் துளஜா அவர்களின் காலத்தில் புறாக்களை வளர்ப்பதற்கு மானியம் வழங்கிய செய்திகள் இக்கட்டடங்களின் வடிவமைப்பின் சிறப்பையும் அதன் மரபு நிலையையும் அறியப்பெரிதும் துணை நிற்கின்றன எனக் கூறலாம். ஏனெனில் நாகூர் தர்க்காவின் கட்டட அமைப்பு முறையைக் காணும் பொழுது கபோத வடிவமைப்பு முறையைப் பின்பற்றியது தெளிவாகின்றது. அவை, அறுகோண வடிவமைப்பாலும் அமைந்துள்ளன என்பதும் குறிப்பிடத் தக்கதாகும். எனவே, திருவையாறு திவான் வாடாக் கட்டடத்திலுள்ள புறாக்கூடுகளின் வடிவமைப்பும் நாகூர் தர்க்காவின் புறாக்கூடு வடிவமைப்புத் தோற்றமும் காணும்பொழுது இவ்விரண்டும் மனோரா கட்டடம் கட்டப்பட்ட காலத்திற்கு முன்பே உள்ளவை எனக் கருதமுடிகின்றது. எனவே, மனோரா கட்டடத்திற்குரிய வடிவமைப்பு இந்த கபோதிகா வடிவமைப்பு முறையைப் பின்பற்றி கட்டப்பெற்ற கட்டடமாகக் கருதலாம். ஆனால் அறுகோணவடிவம் கொண்ட இதே முறையைப் போன்ற கட்டங்கள் சீனாவில் கட்டப் பட்டுள்ளன. ஆனால் மனோரா



மனோரா ஒன்பது அடுக்கு
கலங்கரை விளக்கம்



இரண்டாம் சரபோஜி மன்னர்



உப்பரிகையின் மேல்தோற்றம்



மனோராவின் உட்புறவாயில்



மனோராவின் கொத்தளம்



கொத்தளத்தின்
படிக்கட்டுக்கள்



அழகிய தூண்கள்

கட்டடத்திற்குரிய வடிவமைப்பு சீனக் கட்டடக்கலையின் தாக்கமாகக் கூறப்போதிய சான்றுகள் இல்லை. ஆனால் சீனாவிற்கும் தமிழகத்திற்கும் இடையே ஏற்பட்ட வணிகத் தொடர்பு மிகப் பழமையானது என்பது வரலாறு காட்டும் உண்மை. எனவே, மனோராவின் வடிவமைப்புத் தோற்றத்தைக் காணும்பொழுது திருவையாறு, நாகூர் புறாக் கூடுகளின் வடிவமைப்பைப் பின்பற்றியே கட்டப்பெற்றதாகக் கூறுவதற்கும் போதிய எழுத்துச் சான்றுகள் இல்லை.

## கோட்டைச் சுவர்

ஒரு கோட்டையை எவ்வாறு அமைக்க வேண்டும் அதன் வடிவமைப்பில் காணப்படும் அமைவிடங்களின் நுட்பம் எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக மனோராக் கோட்டையைக் கூறலாம். அத்தகைய சிறப்பிற்குரிய கட்டட வடிவமைப்பையும் தொழில் நுட்பத்துடன் கூடிய செயல்தன்மையையும் பெற்று மனோரா விளங்குகின்றது என்றால் மிகையன்று.

அறுகோண அகழியைச் சுற்றி சுமார் பன்னிரண்டு அடி உயரத்தில் கோட்டைச் சுவர் கட்டப்பட்டுள்ளது. இச்சுவரின் மேற்பகுதியில் கொத்தளங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவை குவிந்து பின்னர் விரிந்து செல்வது போன்று அமைக்கப்பட்டுள்ளன. குவிந்த பகுதியிலிருந்து படைவீரர்கள் ஆயுதங்களைப் பொருத்தித் தாக்குவதற்கு ஏற்ப இவை அமைகின்றன. இவற்றின் இடையே பீரங்கிகளும் வைக்கப்பட்டிருந்தன என்பதை 1814 ஆம் ஆண்டினைச் சார்ந்த மோடி ஆவணம் (19-66) கூறுகின்றது. எனவே கோட்டைச் சுவர்கள் பீரங்கிகளைத் தாங்கி நிற்பதற்கேற்ப வடிவமைக்கப் பட்டிருந்தன என்பது தெளிவாகின்றது. மேலும் இக்கோட்டையில் பீரங்கிகள் வைக்கப்பட்டிருப்பதால் பாதுகாப்புச் சிறப்பிற்குரிய இடமாக திகழ்ந்தது எனக் கருதலாம்.

கோட்டைச் சுவரின் மேற்குப் பகுதியில் பாதுகாப்பு அறைகள் உள்ளன. இவ்வறைகள் 'கப்பல் கட்டுவதற்குரிய துணைப் பொருட்கள் ஆயுதங்கள் வைக்கப்பட்டிருந்தன என்றும் அவற்றைப் பாதுகாப்பாக வைத்து முத்திரையிட்டு வைக்கப்பெற்ற கதவுகள் இருந்தன என்றும் மோடி ஆவணங்கள் கூறுகின்றன. இவ்வாறு பாதுகாப்பதற்கு வைக்கப்பெற்ற பொருட்கள் சிதைவுற்றும், பதிவுமுறை இல்லாமல் பொருட்களை வெளியே எடுத்துச் சென்ற குற்றம் பற்றியும் மோடி ஆவணக்கடிதங்கள் கூறுகின்றன.

இப்பாதுகாப்பு அறையின் சிறப்பு, அதன் செயற்பாட்டுத் தன்மைகள் என்ன என்பது பற்றியும் மிகவும் தெளிவாக ஆவணங்களில் குறிக்கப்பட்டுள்ளன (இணைக்கப்பட்டுள்ள ஆவணங்களைக் காண்க). எனவே, இக்கோட்டையின் உட்பகுதியில் அமைந்திருந்த அறைகள் பொருட்பாதுகாப்பிற்கும் ஆயுதங்கள் வைப்பதற்கும் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன என்பது தெளிவாகின்றது.

## கோட்டை வாயில்

மனோராக் கோட்டையில் மூன்று வாயில்கள் உள்ளன. முதலிரண்டு வாயில்கள் சிறிய அளவிலுள்ள கதவுகளைக் கொண்டவை. இதன் இரண்டாம் முகப்பு வாயில் அகழியைத் தாண்டியுள்ளது. மிக அழகாகக் கட்டப்பட்ட இம்முகவாயில் மேலைநாட்டுக் கலைப்பாணியைப் பின்பற்றிக் கட்டப்பட்டுள்ளது. இரண்டு வாயில் தூண்களும் கல்லால் கட்டப்பட்டவை. இவ்விரண்டு தூண்களின் மேற்பகுதி குண்டுக் கற்களால் அழகு படுத்தப்பட்டவை. வாயில் தூண்களின் மேல்பகுதியில் குண்டுக் கற்களை வைத்து அழகு செய்வது டச்சுக்கட்டடக் கலையின் தாக்க மாகும். இதனை ஐரோப்பாவின் மறுமலர்ச்சிக் காலக் கலைப்பாணி என்றும் கூறுவர். இத்தகு சிறப்பிற்குரிய இந்த வாயில் தூண்களின் இருபுறமும் இரண்டு காவலர்கள் நிற்குமாறு கட்டப் பட்டுள்ளன. கோட்டை வாயில்களின் நிலைக் கதவுகளுக்கருகே படைவீரர்களை நிறுத்தி வைப்பது என்பது மிகத் தொன்மையான மரபாகும். ஏனெனில் அனுமதிச் சீட்டுக்களின் பேரில் ஆட்களை உள்ளே அனுப்புவதும் வெளியே அனுப்புவதும் இவர்களின் பணியாகும். இம்முறையைப் பின்பற்றியே மனோராக் கோட்டை யிலும் வாயிற்காப்போன் அறைகள் இடம்பெற்றுள்ளன. இவ்வாயில் தூண்களின் ஒரு புறம் ஆங்கிலக் கம்பெனியர்களின் சின்னம் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கோட்டையின் வாயில் தூண்களில் ஆங்கிலேயரின் சின்னம் இடம் பெறுவதால் இக் கோட்டை ஆங்கிலேயரின் முழு அதிகாரத்திலும் இருந்திருக்கின்றது என்பது தெளிவாகிறது. இக்கோட்டையை நெப்போலியனுடைய வீழ்ச்சிக்கு மகிழ்ந்து கட்டியிருந்தாலும் இக்கோட்டை ஆங்கிலேயர்களின் இடமாகவே வைத்துக் கொள்ள அனுமதிக்கப் பட்டிருக்க வேண்டும். ஏனெனில், மனோராக் கோட்டையில் பாதுகாப்புப் பணியில் இருந்த ஆங்கிலேயர் ஒருவர் தஞ்சை மராட்டிய மன்னர் இரண்டாம் சரபோசிக்குக் கடிதம் எழுதியுள்ளார். இதில் இவரின் குறைகள் என்ன என்பதைக் கூறி உதவுமாறு பணிவுடன் வேண்டியுள்ளார். எனவே, கோட்டையின் பாதுகாப்பு ஆங்கிலேயரிடம் இருந்தாலும் அவர்களுக்கு உதவிச், சம்பளம் வழங்கி வந்தவர் மன்னர் இரண்டாம்

# மனோரா - வெட்டுத் தோற்றம்



# மனோரா - நிலமட்டத்து வரைபடம்



சரபோசி என்பது தெளிவாகின்றது. இக்கோட்டையிலிருந்து மன்னருக்கு எழுதிய இரண்டு கடிதங்கள் தஞ்சை சரசுவதி மகாலில் உள்ளன. அவை மிக அழகான ஆங்கில எழுத்துகளால் எழுதப் பட்டுள்ளன. அவற்றில் ஒன்று கீழே காண்பது.

To

His Highness Magah Rajah Serfojee
Rajah of Tanjore.

May it please your Highness,

That I with the most respectful submission beg leave to state, that tho and conscious of your Highness constantly bestowed benevolence on me but still by the repeated cravings of my credit at Portonovo, who are managing how to go to law with me & by the insufficiency of my pay to satisfy them therefrom, I am therefore necessitated to venture most humbly to entreat your highness the generousity of advancing me the sum of 200 pagoda that I may clear of these my only debts & lead a tranguil life under you Highness benevolent protection.

I would have presumed to beg this favour whilst your Highness had the generousity to assist me in first entering your Highness servise, but being then overloaded with your Highness benevolence & ignorant myself of the extent of my debts I was enable to impose on your Highness humanity. However as the longstanding debts sormounting with interest & fearfull of my creditors further proceedings I am confident that your Highness.

Highness will be pleased to bestow on me also this benevolence & order monthly to deduct from my wages whatever your Highness may please to deem proper till the liquidotion of this & the former amount which your Highness been pleased to advance me.

I have the honour submissively to be with due respect.

Thalvanaickpatam,
20th May 1820.

Your Highness,
Most Humble & Faithfull Servant,
**Fridricke Heleny.**

இக்கடிதங்களின் வாயிலாகக் காணும்பொழுது 1820 இல் ஆங்கிலேயரின் அதிகாரத்திற்கு உட்பட்ட இடமாக இருந்துள்ளது என்பது தெளிவாகின்றது. மேலும் கோட்டை வாயில் காப்போன் இருந்துள்ளான் என்பதும் அறிந்துகொள்ள முடிகின்றது.

### வாயில் மண்டபம்

வாயில் வளைவுக் கதவுடையதாக அமைக்கப்பட்டுள்ளது. வளைவுக் கதவு வடிவம் நியோகிளாசிக்(Neoclasic) கலைவடிவமாகவுள்ளது. இக்கதவுடன் இணைந்தாற்போல் உள்ளது வாயில் மண்டபமாகும். வளைவு விதானத்துடன் கூடிய இப்பகுதியில் நான்கு இரட்டைத் தூண்களால் இரண்டு புறத்திலும் அமைந்த குறுமண்டபங்களாக உள்ளன. இம்மண்டபத்தின் விதானம், சுவர், கூறைப் பகுதி, தூண்கள் சங்கு வண்ணத்தில் பளபளப்பாக சுண்ணாம்பு பூச்சுடைய வேலைப் பாடுகளைக் கொண்டுள்ளது. பளப்பளப்பாக இருக்கின்ற வட்டத்தூண்கள் அலங்கார வேலைப்பாடுகள் எதுவும் கொண்டிருக்கவில்லை என்றாலும் அவை காண்போரைக் கவரக்கூடிய பூச்சுத் திறனையும் நுட்பத்தையும் கொண்டுள்ளது. இத்தூண்களின் கலைவடிவம் ரோமானியப் பாணியாகிய 'அயோனிக்' 'டோரிக்' வகையைச் சார்ந்ததாகும். இதில் கூட்டுக்கால்கள் (இரட்டைத் தூண்கள்) அமைக்கப்பட்டிருக்கும் பாணி ஐரோப்பியரின் மறுமலர்ச்சிக் காலத்தியது என்பதால் மன்னர் இரண்டாம் சரபோசியின் கலை ஆர்வத்தையும், ஐரோப்பியர் அல்லாத தமிழரின் கட்டடத்திறன் அறிவையும் உணர்வதற்கு இக்கலைப் பாணி மிகவும் உதவுகின்றது. நமது மரபில் இருக்கக் கூடிய 'நீற்றுச் சுண்ணாம்பு', கடற்கரையில் காணப்படும் கடற்சங்கு, கிளிஞ்சல்களின் மூலமாகத் தயாரிக்கப்பட்ட சுண்ணாம்பு போன்றவற்றால் பூசப்பட்டுள்ள தொழில் நுட்பம், சிறப்பு இம்மண்டபத்தில் அறியமுடிகின்றது.

மனோராக் கோட்டையைக் கட்டுவதற்குரிய கட்டுமானப் பொருட்களாகிய செங்கல், சுண்ணாம்பு, மரம், போன்றவை கோடியக்கரையிலிருந்து தோணியில் கடல் மார்க்கமாக எடுத்துச் சென்றமை பற்றிய செய்தியை மோடி ஆவணங்கள் (2-315) குறிப்பிடுகின்றன. எனவே, மனோராக் கோட்டை கட்டுவதற்கு தஞ்சை அரண்மனைக் கட்டுமானப் பிரிவு தொழில் நுட்பக் கலைஞர்களால் கட்டப்பட்டது என்பது தெளிவு. மேலும் கோடியக் கரையிலிருந்து பூச்சுப் பொருள்களும், செங்கல்லும் வந்துள்ளன என்பதால் ஏற்கனவே கோடியக்கரையில் தங்கி அரண்மனைக் கட்டடப் பணிகளை மேற்கொண்டு வந்த நாராயணக் கொத்தன்

பிள்ளை, ஆதியப்பக் கொத்தன் போன்றோர் இக்கட்டடத்தைக் கட்டியிருக்கிறார்கள் என்பதை மோடி ஆவணங்களின் வாயிலாக அறியமுடிகிறது.

மனோராக் கோட்டைச் சுவரின் ஒரு பகுதியில் கற்களால் உள்ள துண்டுக்கல்லில் 'மீன்' வடிவம் பொறிக்கப்பட்டுள்ளது. மீன் வடிவம் பொறித்து வைக்கும் முறை பாண்டியர் அரசின் காலத்தியது. இவ்வாறு மீன் சின்னம் பொறிப்பது பாண்டியர் மரபு என்பதால் மனோராக் கோட்டைச் சுவருக்குரிய கருங்கற்கள் பல அண்மையிலுள்ள பாண்டிய நாட்டுப் பகுதியிலிருந்து பெற்றிருக்கக் கூடும். குறிப்பாக கோயிற் கலைப்பாணியையுடைய கருங்கற்சிற்ப வடிவங்கள், அலங்கார வடிவங்கள் இக்கோட்டைக் கட்டுமானத்திற்குப் பயன்படுத்தப் பட்டுள்ளது.

## உப்பரிகை

மனோரா கட்டடத்தின் மையத்தில் கட்டப்பட்டுள்ள நிலை மாடம் உப்பரிகை என்றும் அழைக்கப்படுகின்றது. இதனைத் தூண் என்றும் கல்வெட்டுக் கூறுகின்றது. இம்மாடத்தின் மொத்த உயரம் 22.3 மீட்டராகும். ஒன்பது அடுக்குகளைக் கொண்ட வடிவமைப்புடைய இந்நிலை மாடம் அறுகோண வடிவத்தில் கட்டப்பட்டுள்ளது. அடித்தளம் முதல் மேல்தளம் வரை அறுகோண வடிவமாகவே இடம் பெறுகின்றது. இம்மாடத்தின் ஆறு புறங்களிலும் ஆறு வளைவுச் சன்னல்கள் உள்ளன. புறச்சுவரின் சிறிய வளைவுகள் முதலிரண்டு நிலைகளில் ஒரு புறத்திற்கு முப்பது எண்ணிக்கையில் உள்ளன. மூன்றாம் நிலையில் 28 எண்ணிக்கையும் பிற நிலைகளில் 22 எண்ணிக்கையும் கொண்டுள்ளன. இவ்வளைவுக் கூடுகளை வெளியே இருந்து பார்க்கும்பொழுது தெளிவாகக் காணலாம். ஆனால் உள்ளே காண இயலாதவாறு பூசப்பட்டுள்ளது. பூச்சுகள் வழவழப்புடன் வெள்ளை நிறமாக (சங்கு நிறமாக) இன்றும் காட்சியளிக்கின்றன. நிலைகளில் உள்ள படிகளின் எண்ணிக்கை ஒவ்வொரு நிலைக்கும் ஒன்று வீதம் குறைந்து கொண்டே செல்லுகின்றன. மேல்மாடிச் சுவரின் கீழ்ப் பகுதியில் கல்லில் வடிக்கப்பெற்ற அலங்கார வளைவுகள் அழகு செய்கின்றன. இவ்வலங்காரத்தின் மேல் எழுப்பப்பட்டுள்ள மேல்மாடிச் சுவர்ப் பகுதியுடன் கட்டிய தளம் திறந்தவெளியாகக் காணப்படுகின்றது.

## கலங்கரை விளக்கம்

மனோராக் கட்டடம் நெப்போலியனுடைய வீழ்ச்சிக்கு நினைவுச் சின்னமாகக் கட்டப்பட்டாலும், இக்கட்டடம் கலங்கரை

விளக்கமாகவும் திகழ்ந்ததாகக் குறிக்கப்படுகின்றது. கடல் அலை மோதும் வெள்ளி மணல் பரப்பில் உயர்ந்து நிற்கும் இக்கட்டடத்தின் மீது விளக்கு வைக்கப்பட்டிருந்தது என்பதை, இப்பகுதியில் மீன்பிடிக்கச் செல்லும் மீனவர்கள் கூறுகின்றனர். எனவே, அக்காலத்தில் கலங்கரை விளக்கு இந்த உப்பரிகையில் அமைக்கப் பட்டிருக்க வேண்டும் எனக் கருதலாம். ஆனால் இதுகுறித்துத் தெளிவான வரலாற்றுச் சான்றுகள் கிடைக்கப் பெறவில்லை.

**வாயில் தூண்கள்**

தாமரையின் வடிவம் போல் அரைவட்டமாகக் குவிந்து செல்லும் இக்கோட்டையில் இருபுறத்திலும் இரண்டு வாயில்கள் உள்ளன. அவை இரண்டு இரண்டு வாயில் தூண்களைக் கொண்டுள்ளன. வாயில் தூண்களை அமைக்கும் முறை ஆங்கிலேயர் காலத்தில் மிகுதியாகப் பின்பற்றப்பட்டுள்ள ஒரு கட்டடக்கலை வடிவமாகும். உயர்ந்து நிற்கும் இத்தூணின் மீது ஒரு உருண்டை வடிவம் கொண்ட கல் அல்லது சுதை வைக்கப் பட்டிருக்கும். இவ்வகை அமைப்புடைய தூண்களைத் தஞ்சை அரண்மனையிலும் காணலாம். பொதுவாகக் கூறின், போர்ச்சுக்கீசியர் காலத்திற்குப் பின்பு டேனிசு வணிகக் குழுவினர் தரங்கம்பாடியில் கோட்டை வாயில் ஒன்றை அமைத்தனர். அதன் மீதும் உருண்டை வடிவுடைய குண்டுகள் வைக்கப்பட்டுள்ளன. இக்கலை வடிவமே பின்னர் மராட்டியர் காலத்தில் பெரிதும் பின் பற்றப்பட்டுள்ளது என்பது தெளிவு. இப்பாதையின் வளைவுச் சுவரின் இடையே சிறிய அறைகள் உள்ளன. அவை சேமிப்பு அறைகளாகவும் வீரர்கள் தங்குவதற்குரிய அறைகளாகவும் இருந்தன என்பது தெளிவாகின்றது.

மனோராக் கட்டடக் கலையின் வடிவமைப்பைக் காணும்பொழுது ஓர் அழகிய திட்டமிட்ட வடிவமைப்பு என்பதை முதலில் உணரமுடிகின்றது. கட்டடக் கலையின் தோற்றம் இந்துக் கலையும், இஸ்லாமியக் கலையும், இணைந்து 'சராசானிக்' (Saracenic)கலைப்பாணியாகத் திகழ்கின்றது. ஆனால் கோட்டையின் உள்ளே இருக்கின்ற தூண்கள் ஆங்கிலேயரின் மறுமலர்ச்சிக் கலை வடிவங்களாக உள்ளன. இங்கு தமிழகத்தின் தொழில்நுட்பம், ஆங்கிலேயரின் கலைவடிவம் ஆகிய இரண்டும் இணைந்து நிற்பதைக் காணமுடிகின்றது. நீர் நிறைந்த கடற்கரை யோரமாகப் பெரிய கட்டடங்களைக் கட்டும் தொழில் நுட்பத்திறன் மராட்டியர் ஆட்சியின் போது இருந்துள்ளது என்பது பாராட்டுதற் குரியது.சரபோஜிமன்னரின் காலத்தில் மேலைநாடுகளில் எத்தகைய

கட்டடக் கலைப்பாணி சிறந்து விளங்கியதோ அவற்றைத் தஞ்சை மண்ணில் அவர் அறிமுகப்படுத்தியுள்ளார். இவரது முயற்சியில் சாளுவ நாயக்கன்பட்டினம் 1800 முதல் 1835 வரை சிறப்புடன் திகழ்ந்தது என்பதும் உலகின் பல்வேறு நாடுகளுக்கும் இங்கிருந்து பொருட்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன என்பதும் தெளிவாகின்றது. எனவே, மராட்டியரின் ஆட்சிக்காலத்தில் சிறப்புற்ற இந்த துறைமுகப் பட்டினம் தமிழக வரலாற்றில் சிறப்பிடம் பெறுகின்றது. இக்கோட்டையைப் பாதுகாப்பதும் நமது கடமை என்பதிலும் காலனியர் ஆட்சிக் காலத்தில் தமிழகத்தில் ஏற்பட்ட கட்டடக் கலை வரலாற்றின் மாற்றங்களையும் நவீனத்துவம் பெற்ற வளர்ச்சி நிலைகளை அளவிடுவதற்கும் இம்மனோராக் கட்டடம் சிறந்த சான்றாகத் திகழ்கின்றது.

# கோட்டை அகழி

மனோராக் கட்டடம் ஒரு கோட்டை என்று கூறப்படுதற்குக் காரணமாக அமைவது அகழியாகும். அகழி என்பது அகழ்ந்து எடுக்கப் பெற்ற ஆழமான பகுதியைக் குறிக்கும். அகழி அதன் பயன்பாட்டால் அரண் என்று கூடக் கருதப்படலாம். உட்கோட்டை அல்லது அகக்கோட்டையைக் காப்பாற்றும் முகமாகவும் பாதுகாப்பிற்காகவும் அகழி அமைகின்றது. இவ்வாறு கோட்டைகளை அரண்போல் பாதுகாக்கும் முறையை அதன் இயற்கைத் தன்மைக்கேற்ப பெயரிட்டழைப்பது சங்க காலம் தொட்டு வரும் மரபாகவே இருந்துள்ளது. வேதகாலந்தொட்டும் மகாபாரதம், இராமாயணம் போன்ற காப்பியங்களிலும் பிற கட்டடக்கலை நூல்களிலும் அரண் அதன் அமைப்பு முறை அவற்றின் பெயர்கள் கிடைக்கின்றன. இவை கோட்டை, அகழி, கோட்டைச் சுவர் ஆகியவற்றின் தொன்மை வரலாற்றையும் அதன் வளர்ச்சி நிலையையும் எடுத்தியம்புகின்றன. இந்நூல்களின் வாயிலாகக்காணும் பொழுது அரண்களை

1. நீர் அரண்
2. மலை அரண்
3. காட்டரண்
4. மண் அரண்
5. கல் அரண்
6. கலவை அரண் (பல்வேறு கூட்டுப்பொருட்களால் அமைந்தவை.)

எனப்பெரும் பிரிவுகளாகப் பிரித்துக் காண்பர். நீரால் சூழப்பெற்ற கோட்டைக்கு நீர் அரண், இயல்பாக மலைகளால் சூழப்பெற்ற மலைகளைக் கொண்ட கோட்டைக்கு மலை அரண், காட்டு மரங்களால் சூழப்பெற்ற வனப்பகுதியில் அமைந்த கோட்டைக்கு காட்டு அரண், மண்ணால் கட்டப்பட்ட சுவர்களையும் பெரிய மதில்களையும் கொண்ட கோட்டைச் சுவருக்கு மண் அரண், கல்லால் அமைந்த கோட்டைச் சுவருடைய அரணுக்குக் கல்லரண், பல்வேறு கட்டுமானப் பொருட்களையும் (கல், மண், மரம், நீர்) கொண்ட மிஸ்ரதுர்க்கம் அல்லது கலவை அரண் (கூட்டரண்) எனப் பிரிக்கப்பட்டுள்ளன. எனவே, கோட்டையின் அரண்கள் என்பன இயற்கையாகவும் செயற்கையாகவும் அமைந்திருந்தன என்பது தெளிவாகிறது.

மனோராக் கோட்டையின் அகழி முற்றிலுமாக நீர் நிரம்பப்பெற்றமையால் இது நீர் அரண் எனக் கூறலாம். அறுகோண வடிவமைப்புடைய அகழியாக அது அமைக்கப்பட்டுள்ளது. மனோராவின் தளவடிவமைப்பு அறுகோணம் என்பதும் இக்கோட்டையின் மையத்தில் கட்டப் பட்டுள்ள மனோரா மாடம் (Tower or column) அறுகோண வடி வமைப்பால் கட்டப்பட்டும் உள்ளது என்பதும் குறிப்பிடத் தக்கதாகும். இந்த அகழி நூற்றியெண்பது அடி சுற்றளவையும் பத்தடி ஆழத்தையும், பன்னிரண்டு அடி அகலத்தையும் கொண்டதாகும். கல், செம்பறாங்கல் ஆகியவற்றால் கட்டப்பட்ட இந்த அகழி உறுதியாகவும், அழகாகவும் காட்சியளிக்கின்றது. சிறிய அளவில் மனோரா கோட்டையும் அதன் அகழியும் அமைவதால் அதன் வடிவமைப்பின் சிறப்பையும் அழகையும் எவரும் எளிதில் அறிந்துகொள்ள வாய்ப்பாக அமைகின்றது. அதிகச் சிதைவுகள் ஏற்படாமல் பாதுகாப்பாக இந்த அகழிக்கட்டடம் உள்ளது. இது தமிழகத்தின் கட்டடக் கலைத் திறனுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது.

## தூக்குப் பாலம் அல்லது தொங்கு பாலம்

அகழிக்கும் மையப் பகுதியாகிய நிலைமாடத்திற்கும் இடையே இரண்டு பாலங்கள் கட்டப்பட்டிருந்துள்ளன. அவை அழிந்து மறைந்து விட்டன. ஆனால் பாலம் அமைக்கப்பட்டிருந்ததற்கான எச்சங்கள் காணப்படுகின்றன. இவ்விரண்டு பாலங்களில் ஒன்று இக்கோட்டைக்குரிய முகப்பு வாயிற்பாலமாகும். மற்றொன்று அதன் பின்புறத்தே சிறிய அளவில் அமைந்ததாகும். வாயில்கள் இரண்டும் 'தூக்குப் பாலங்களால்' இணைக்கப்பட்டுள்ளன என்பதை அவ்விடங்களில் சிதைவுகளின் இடையே மீதமுள்ள இரும்புத் தகடுகள் பொருந்திய இடங்கள் எடுத்துக்காட்டுகின்றன.

தூக்குப் பாலங்கள் கோட்டைகளின் அகழிக்கு மேல் அமைக்கும் முறை தொன்மையானதாகும். சங்க இலக்கியங்களில் தூக்குப் பாலம் அமைந்திருந்த கோட்டை பற்றிய செய்திகளைக் கூறுகின்றன. எனவே, கோட்டைகளுக்குத் தூக்குப் பாலங்கள் அமைக்கும் முறை தொன்றுதொட்டு இருந்துள்ளது என்பதை நாம் உணரமுடிகின்றது. இவ்வாறு அமைந்த தூக்குப் பாலங்கள் மரத்தால் அமைக்கப்பட்டிருந்தன என்பதை இலக்கியங்கள் சுட்டிக் காட்டுகின்றன. தூக்குப் பாலம் அமைப்பது எதிரிகளை எளிதாகக் கோட்டைக்குள் நுழைவதைத் தடுப்பதற்காக அமைக்கப்பட்டது. எனவே, மனோராக் கோட்டையின் தூக்குப் பாலம், தமிழகக் கட்டடக் கலையின் மரபில் வந்த வடிவமைப்பைக் கொண்டதாகக் காண முடிகின்றது.

கோட்டையின் பின்புறத்தேயுள்ள சிறிய அளவில் அமைந்த வாயில் ஒன்றுள்ளது. தற்பொழுது இந்த வாயில் அடைக்கப்பட்டு விட்டது. இச்சிறிய வாயிலின் நோக்கம் அவசரக்கால வழியாகக் கூட இருக்கலாம் அல்லது எளிதில் ஒருவர் வந்து செல்லும் அளவில் பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

கோட்டையின் நுழைவுவாயில் ஒன்று முதலில் சிறிய அளவில் உள்ளது. தற்பொழுது, இந்நுழைவு வாயிலின் முன்பகுதி செங்கற்களால் கட்டப்பட்ட நடைபாதை உள்ளது. இப்பகுதியின் இருபுறங்களிலும் அறைவட்டம் போல் இரண்டு குழிகள் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வடிவமைப்பு, அதன் பயன்பாடு என்னும் நிலையில் இக்குழிகள் அகழியாக (முகப்பு மட்டும்) அமைந்திருக்க வேண்டும். பின்னர் எவ்வாறு இக்கோட்டையின் அகழியின் தூக்குப்பாலம் மாறி அதற்குப் பின்னர் செங்கற்களால் நடைபாதையாகிய பாலம் அமைக்கப்பட்டதோ அவ்வாறே இங்கும் அமைத்துள்ளனர் எனக் கருதலாம். இவ்வாறு இந்நுழைவு வாயில் அகழியுடன் அமைந்திருப்பதால் இங்கும் ஒரு சிறிய அளவில் 'தூக்குப் பாலம்' அமைக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் காலப்போக்கில் பேணிக்காக்கும் பொறுப்பும், வசதியும், பயனும் குறைந்த காலத்தில் இவை சிதைவுற்றுப் பல மாற்றங்களைப் பெற்றிருக்க வேண்டும் என்பது தெளிவு.

அறுகோண அகழியில் நீர் நிரப்பி வைப்பதற்காகச் சிறந்ததொரு திட்டத்தை மன்னர் இரண்டாம் சரபோசி அளித்திருக்கின்றார். தஞ்சையில் 'ஜலசூத்திரம்' திட்டம் செயல்படுவது போன்று மனோராக் கோட்டைக்கும் நன்றாகத் திட்டமிட்டுச் செயல்படுத்தியிருக்கின்றார். இக்கோட்டையின் அருகேயுள்ள அரண்மனைத் தோட்டத்தில் ஒரு பெரிய கிணறு வெட்டப்பட்டுள்ளது. இக்கிணற்றின் வழியே நேராக அகழியின் மேற்குப் பகுதியில் ஒரு திறவு வாயிலுடன் வாய்க்கால் பூமிக்கடியில் கொண்டு வரப்பட்டு இணைக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும். மற்றொரு வாய்க்கால் இக்கிணற்றிலிருந்து அதன் மேற்குப் பகுதியிலுள்ள குளத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. எனவே, கிணற்றில் நீர் அதிகமாகும்பொழுது வாய்க்காலின் வழியே கோட்டை அகழிக்கு வந்து சேரும். கிணற்றில் நீர் குறையும்பொழுது குளத்திலிருந்து நீர் பெறப்பட்டு அகழி நிரப்பப்பட்டிருக்கக் கூடும் எனக் கருதலாம். இவ்வாறு நிரப்பப்பெற்ற அகழியின் நீர் தேவைப்பட்டால் வெளியே செல்வதற்கு இந்த அகழியின் கிழக்குப் பக்கத்தில் திறவு வழி ஒன்றுள்ளது. இதன் வழியே செல்லும் நீர்,

கோட்டைக்கு வெளியே சென்று கடலில் கலந்துவிடுமாறு அமைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு சிறப்பாகத் திட்டமிட்டு இக்கோட்டையின் அகழி கட்டப்பட்டிருந்தது என்றால் இவ்விடத்தின் சிறப்பு, அதன் பாதுகாப்பின் நோக்கம் ஆகியவை மேலும் ஆய்வதற்குரியவையாகும். இந்த அகழியின் அமைப்பு முறை, நீர் வழிப் பகுதிகளின் அமைப்பு முறை, பாலங்களின் அமைப்பு முறை ஆகியவற்றைக் காணும்பொழுது இது மராட்டிய ஆங்கிலேயர்களின் கூட்டு முயற்சியில் விளைந்த கலை வடிவமைப்பாகக் கருதலாம்.



மனோராவில் உள்ள உருதுக் கல்வெட்டு

# மனோராக் கல்வெட்டுகள்

கல்வெட்டுக்கள் என்பவை வரலாற்றுப் பெட்டகங்களாகத் திகழ்கின்றன. கல்வெட்டுக்கள் ஒரு வரலாற்றை அறிவதற்கும் எழுதுவதற்கும் பெரிதும் துணை நிற்கின்றன. நம் முன்னோர் இப்பணியின் சிறப்பு அறிந்து கல்வெட்டுக்களை நமக்கு விட்டுச் சென்றுள்ளனர். இவர்களில் இடம் பெறும் மன்னர் இரண்டாம் சரபோஜி பாராட்டுதலுக்குரியவராவார். இலக்கியம், மொழி, நுண்கலை எனப் பல்வேறு கலைகளில் நாட்டம் செலுத்திப் புகழ் பெற்ற இம்மன்னர் கல்வெட்டுக்களையும் பல்வேறு இன, மொழி மக்கள் உணர்ந்தறியுமாறு பல்வேறு மொழிகளிலும் கல்வெட்டுக்களைச் செதுக்கி வைத்துள்ளார். இரண்டாம் சரபோஜியின் கல்வெட்டுச் சான்றுகள் இருமொழிகளிலும் தமிழ்-மராத்தி; தமிழ்-ஆங்கிலம்; மராத்தி பாரசீகம்; மும்மொழிகளிலும் மராத்தி-தமிழ்-தெலுங்கு; மராத்தி-தமிழ்-ஆங்கிலம்; நான்கு மொழிகளிலும் மராத்தி- தமிழ் - தெலுங்கு-வடமொழி; ஐந்து மொழிகளிலும் மராத்தி- தமிழ் - தெலுங்கு-ஆங்கிலம் - உருது இடம் பெற்றுள்ளன. இதன் வாயிலாக இரண்டாம் சரபோஜி பிற மொழிகளையும் அதன் பயன்பாட்டையும் நன்கு உணர்ந்தவராகத் திகழ்ந்தார் என்பதை உணரமுடிகின்றது. மராட்டியரின் அரண்மனைப் பணியாளர்களில் கல்வெட்டுக்களைச் செதுக்குவதற்கும் கல்வெட்டுக்களையும் படி எடுப்பதற்கும் நன்கு அறிமுகமான-அனுபவமிக்க அறிஞர்களும் இடம் பெற்றிருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இத்தகு சிறப்புமிக்க பணியை இரண்டாம் சரபோஜி மன்னர் பின்பற்றிச் செயல்பட்டதற்கு அவரது தொலைதூர நோக்கும் ஆங்கில ஆய்வாளர்களின் நட்பும் பெரிதும் காரணமாக இருந்திருக்கக் கூடும். அரண்மனையில் கல்வெட்டுப்படி எடுத்தல், எழுதுதல் போன்ற வேலைகளைச் செய்பவர்கள் 'அட்லிபிகாரர்' என்றழைக்கப்பட்டனர். எனவே, மன்னன் இரண்டாம் சரபோஜி செதுக்கி வைப்பது மட்டும் அல்லாமல் பழமையான கல்வெட்டுக்களையும் படி எடுத்துள்ளார் என்பது பாராட்டுதற்குரியதாகும். இத்தகைய சிந்தனையின் விளைவே மனோராக் கோட்டையிலுள்ள கல்வெட்டுக்களாகும். மனோராக் கோட்டையில் ஐந்து மொழிகளில் கல்வெட்டுக்கள் வைக்கப் பட்டுள்ளன. அவை சலவைக்கல்லில் செதுக்கப்பட்டுள்ளன.

மிகத் தொலைதூரத்திலுள்ள ஒரு நாட்டின் போர் முடிவடைந்து அதன் வெற்றியைக் குறிக்கும் முகமாக ஒரு நிலை மாடத்தைக்கட்டி அதில் ஐந்து மொழிகளில் கல்வெட்டுக்களைப் பொறித்து வைப்பது என்பது இரண்டாம் சரபோஜி மன்னன் ஆங்கிலேயரிடம் கொண்ட ஆழமான நட்பையும் ஆங்கிலேயரின் வெற்றிக்காகச் சரபோஜி மன்னர் அளித்த உதவிகளையும் உணர்த்துகின்றன. மனோராவில் தமிழ், மராட்டி, தெலுங்கு, உருது, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் கல்வெட்டுக்கள் இடம் பெறுகின்றன. இதன் வாயிலாக இப்பகுதியில் தமிழ், மராட்டி, தெலுங்கு, உருது, ஆங்கிலம் பேசுகின்ற மக்கள் வசித்து வந்துள்ளனர் என்பது தெளிவாகிறது. மேலும் வணிகத் தொடர்புடைய தளமாகவும் அமைந்திருப்பதால், இந்த ஐந்து மொழிக் கல்வெட்டுக்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன எனக் கருதலாம்.

மனோராக் கோட்டையின் மாடம் மாமன்னன் நெப்போலியன் ஆங்கிலேயரிடம் தோற்றுவிட்ட நிகழ்வைக்கண்டு மகிழ்ந்து அதன் நினைவாகக் கட்டப்பட்டதாக கூறப்பட்டுள்ளது. சாளுவ நாயக்கன் பட்டினத்தின் அருகேயுள்ள இடம்தான் சேதுபாவா சத்திரம் எனும் ஊராகும். அங்கு ஆங்கிலேயரின் குடியிருப்புகள் இருந்தன என்பது மோடி ஆவணங்கள் நமக்குக் காட்டும் செய்திகளாகும்.

மனோராக் கோட்டையில் அழகிய எழுத்துருவம் கொண்ட ஐந்து கல்வெட்டுக்கள் உள்ளன. அவை கீழ்வருமாறு அமைந்துள்ளன:

**தமிழ்க் கல்வெட்டு**

*"இங்கிலீசு சாதியார் தங்கள்*
*ஆயுதங்களினாலடைந்த செய*
*சந்தோஷங்களையும் போனபாற்தேயின்*
*தாழ்த்தப்படுதலையும் நினைவுகூரத்*
*தக்கதாக இங்கிலீசு துரைத்தனத்தின்*
*சினேகிதரும் படைத் துணைவருமாகிய*
*தஞ்சாவூர் சீர்மை மகாராசா சத்திரபதி*
*சரபோசி மகாராசா அவர்கள் இந்த*
*உப்பரிகையைக் கட்டி வைத்தார்கள் 1814."*

## ஆங்கிலக் கல்வெட்டு

"His Highness Maharajah Sirforjee Rajah
Of Tanjore The Friend and Ally of the
British Government to Commemorate
the Triumphs Erected this Column of
British Arms and the Downfall of
Bonaparate 1814."

மனோராக் கோட்டையின் கல்வெட்டுக்கள் அனைத்தும் ஒரு செய்தியை மட்டும் குறிப்பிட்டாலும் நடையில் மாற்றங்களுடன் இருக்கின்றன. சான்றாக உப்பரிகையைக் கூறலாம். இங்குள்ள கல்வெட்டுக்களில் 'உப்பரிகை', 'துவஜ சௌதம்', 'Column" போன்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆங்கிலத்தில் 'Column' என்பதற்கு 'தூண்' என்றும் 'tower' (மாடம்) என்றும் பொருள் கொள்ளலாம். எனவே, இது பல நிலைகளைக் கொண்ட மாடம் என்பதில் தெளிவுள்ளது. ஆனால் மனோரா என்னும் சொல்லுக்கு 'வெற்றியின் சின்னம்', 'வெற்றித் தூண்' என்றும் பொருள் காண்பர்.

மராட்டிக் கல்வெட்டில் "சத்ரபதி தஞ்சை ராஜா இங்கலீஷ் கவர்ன்மென்ட் ராகாரி அவர்கள் இங்கிலீஷ்காரர்களுக்கு தங்கள் கிடைத்த வெற்றி லக்ஷ்மி மற்றும் கிடைக்க பதவியின் உயர்வு அடைந்த" ஞாபகார்த்தத்தை தெரிவிக்க ஏற்படுத்தியது. இது சாலிவா" என அமைகின்றது.

தெலுங்குக் கல்வெட்டில் "மகாராஜஸ்ரீ சத்ரபதி மகாராஜ சரபோஜி மகாராஜனும் ஆங்கில கம்பெனி அவர்களுடைய தோழனாகியவரும், மேலும் நட்புள்ள அவர்களுடைய தோழமையினரும் கலந்து கொண்டு தமதுஆயிதங்களால் புகழ்மிக்க வெற்றிக்கொண்டமைக்காகவும், இந்த போனாவர்த்தினால் கீர்த்தி அடைந்தும் இப்புகழ் அனுபவிக்கக் கடவார்களாக எனவும் இத்துவஜ சௌதத்தை நிறுவப்பட்டதாகும். சாலீவாகன சகம் 1736 ஆகும்" என அமைகின்றது. இக்கல்வெட்டுகளில் குறிக்கப்படும் 'போனவர்த்தி என்னும் பெயர் நெப்போலியனைக் குறிப்பதாகும்.

இங்கு இடம் பெற்றுள்ள உருதுக் கல்வெட்டு காண்போரைக் கவரும் வண்ணம் அழகாகச் செதுக்கப்பட்டுள்ளது. தமிழ், ஆங்கிலக்

கல்வெட்டுகளைப் பார்வையாளர்கள் எழுதுபலகைபோல் எண்ணிக் கொண்டு அவர்களின் பெயர்களையும் அவற்றிற்கு இடையே செதுக்கி விட்டனர். பார்வையாளர்களால் ஏற்படும் வரலாற்றுச் சின்னங்களின் அழிவுகளுக்கு இது ஒரு சிறந்த சான்றாகும். இங்குள்ள மராட்டியர் கல்வெட்டு சிதைந்து காணப்படுகின்றது. இதன் சிதைவுக்குக் காரணம் எழுத்து வடிவமே. ஏனெனில் தமிழகத்தில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின்போது மராட்டி எழுத்துக்களை இந்தி மொழிக் கல்வெட்டு என நினைத்து உடைத்து விட்டனர் எனப் புலவர் செ.இராசு அவர்கள் கூறுகின்றார். இருப்பினும் ஐந்து மொழிக் கல்வெட்டுக்கள் இங்கு கிடைப்பது சிறப்புடையதாகும். மனோராக் கல்வெட்டுக்கள் அனைத்தும் மிகுந்த கலையழகுடன் செதுக்கப்பட்டுள்ளன. மன்னர் சரபோஜியின் வரலாற்றில் இன்றும் புகழ்பரப்பும் இக்கல்வெட்டுக்களைக் காப்பதும் நமது கடமையாகும்.



மனோராவில் உள்ள தெலுங்குக் கல்வெட்டு

# முதலாம் நெப்போலியனின் தோல்வியும் மனோரா நினைவுச் சின்னமும்

முதலாம் நெப்போலியன் போனபார்ட் (கி. பி. 1769 - 1821) பிரான்சு நாட்டின் ஒரு தலைசிறந்த பேரரசனாகத் திகழ்ந்தவர். மத்தியதரைக் கடலில் உள்ள கார்சிகா (Corsica) தீவின் போனபார்ட்டுக் குடும்பத்தைச் சார்ந்த கார்லோ போனபார்ட்டுக்கும் (Carlo Bonaparte) இடுலடிசியா உராமோலினோ (Letiz a Ramolino) போனபார்ட்டுக்கும் மகனாக கி. பி. 1769 - ஆம் ஆண்டு ஆகஸ்ட் 15-ஆம் நாள் கார்சிகாவில் உள்ள அசாசியோ (Ajaccio) என்னும் ஊரில் பிறந்தார். பிரான்சில் உள்ள பிரெய்ன் (Brienne) என்னும் இடத்தில் உள்ள இராணுவப் பள்ளியில் தம் பத்தாம் வயதிலேயே சேர்ந்து பயிற்சி பெற்றார். ஏழைக் குடும்பத்தில் பிறந்த நெப்போலியனுக்கு இராணுவப் பயிற்சிக்குரிய கல்விக்காக பிரான்சின் மன்னன் பதினாறாம் லூயி உதவித்தொகையை அளித்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

பிரஞ்சுப் புரட்சி கி.பி. 1789-இல் ஏற்பட்ட பொழுது அப்புரட்சியில் நெப்போலியன் ஈடுபாடு கொண்டார். கி.பி. 1795 முதல் 1799 வரை பிரான்சின் சிக்கலான அரசியல் சூழ்நிலை நெப்போலியனைப் படைத் தலைமை ஏற்க வாய்ப்பளித்தது. கி.பி. 1796-இல் ஆஸ்திரியாவிற்கு எதிராகப் போர் தொடுக்கும் நிகழ்வில் இவர் மாபெரும் வெற்றியைப் பெற்றார். வட இத்தாலி நாட்டுப் பகுதிகள் நெப்போலியனுக்கு உரியதாயிற்று. இந்நிலையில் ஆங்கிலேயரின் செல்வாக்கினைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று பிரான்சு அரசு கருதியது. பிரான்சு அரசின் வணிக முயற்சிகளுக்கு ஆங்கிலேயரின் வணிக முயற்சிகள் ஒரு பெரும் தடையாகவே இருந்தன. ஆங்கிலேயரும், பிரான்சுக்காரரும், போர்ச்சுக்கீசியரும் புதிய வணிகப் பகுதிகளை ஏற்படுத்தியும், கீழை நாடுகளில் இடங்களைப் பிடித்தும் பெரும் வணிகத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டு வரும் அக்காலக்கட்டத்தில் பிரான்சு, ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்தைக் கட்டுப்படுத்த முயற்சி செய்தது. ஆங்கிலேயரின் உயிர் நாடியான கீழைநாட்டு வாணிகத்தை அழிக்கும் நோக்கத்துடன் நெப்போலியனது போர் உத்திகள் ஏற்படுத்தப்பட்டன. நெப்போலியனது இப்போர்ப் அறிவிப்பு ஆங்கிலேயரின் கீழ்த்திசை நாட்டு வணிக முயற்சிகளுக்கு எதிரான

ஒரு பெரும் திட்டம் எனக் கருதியது. இதனை எதிர்க்க ஆங்கிலேயர் தீவிரம் காட்டினர். இந்த நிலையில் நெப்போலியன் முதன் முதலில் எகிப்தின் மீது படையெடுத்தார். ஆங்கிலேயக் கப்பற்படைத் தலைவன் நெல்சன் தலைமையில் கி.பி. 1798-இல் நைல்நதிக் கரையில் பெரும் போர் நிகழ்ந்தது. இதில் நெப்போலியன் தோல்வியடைந்தார். இத்தோல்வியால் கிழக்கு நாடுகளில் ஆதிக்கம் செலுத்தும் நெப்போலியனது முயற்சி பயனற்றதாகியது. கி.பி. 1799-ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 9-ஆம் நாள் நெப்போலியனை பிரான்சு நாட்டின் முதல் தலைவராகக் (Consul) கொண்ட புதிய அரசு அமைந்தது. கி.பி. 1799 முதல் 1815 வரை ஐரோப்பாவின் வரலாறு என்பது நெப்போலியனது வரலாறு என்றே கருதப்பட்டது.

## கடல் வணிகமும் போரும்

ஆங்கிலேயரின் கடல் வணிக முயற்சிகளை அழிக்க நெப்போலியன் பெரும் திட்டத்துடன் செயல்படுவது கண்டு பிரிட்டன் முன்கூட்டியே உணர்ந்து கொண்டதால் “ஐரோப்பிய நாடுகளின் கூட்டிணைப்பு” என்னும் திட்டத்தினை வகுத்தது. இங்கிலாந்து தனது கடற்படையின் வலிமையையும் பெருக்கிக் கொண்டது. இக்கடற்படையின் விரிவான திட்டங்களால் கீழ்த்திசை நாடுகளின் வணிகம் பெரும் மாற்றங்களை அடைந்தது. பல்வேறு புதியபுதிய வணிக மையங்கள் தோன்றின. இம் முயற்சிகளுக்கு இங்கிலாந்தின் கூட்டுக்குரிய நாடுகளான ஆஸ்திரியா, பிரசியா, உருசியா முதலிய நாடுகள் துணை நின்றன. அக்காலக் கட்டத்தில் ஆசுத்தர்லிட்சு என்ற இடத்தில் ஆஸ்திரியா படைகளையும், கினாப் போர்க்களத்தில் உருசியாவையும் தோற்கடித்து கி.பி. 1806 -இல் நெப்போலியனின் ஆதிக்கம் ஐரோப்பாவில் ஏற்பட்டது. கி.பி. 1807-இல் பிரான்சு நாட்டின் மாபெரும் பேரரசனாகத் திகழ்ந்தார் நெப்போலியன்.

## நெப்போலியனின் தோல்வி

பிரான்சு குடியரசுக்கும் சில ஐரோப்பிய நாடுகளுக்குமிடையே கி.பி. 1803 முதல் 1815 வரை போர் நிகழ்வுகள் நடைபெற்றன. இப்போர்கள் நெப்போலியனுக்கும், பிற ஐரோப்பிய நாடுகளுக்குமிடையே நிகழ்ந்ததால் இப்போரினை “நெப்போலியப் போர்” என்றே வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். கி.பி. 1803 ஆம் ஆண்டு முதல் நெப்போலியனது போர் முயற்சிகள் தொடங்கின. பிரான்சுக்கு ஸ்பெயின் நாடும், பிரிட்டனுக்கு ஆஸ்த்திரியா, இரசியா, சுவீடன், நேபிள்சு ஆகிய நாடுகளும் உதவின. இது மூன்றாம் கூட்டிணைவு என வர்லாறு குறிப்பிடும்.

நெப்போலியன் 2000 படகுகளைக் கொண்டு ஆங்கிலக் கால்வாயைக் கடந்து சென்று பிரிட்டனை வெற்றி கொள்ள முயன்றார். அச்செயல் பெரும் பயனளிக்கவில்லை. ஆனால் பிரிட்டனுடன் சேர்ந்திருந்த நாடுகளில் பெரும்பாலானவற்றை அதனிடமிருந்து உடைத்து சில நாடுகளைத் தனிமைப்படுத்தினார். இருப்பினும் பிரிட்டனின் வணிகத் தொடர்புகள் தடைபெறவில்லை. பிரிட்டனுடைய ஐரோப்பியக் கடல்வழி வணிகத் தொடர்புகளும் விரிவாக்கம் கண்டன. இதனை ஒட்டுமொத்தமாக அழித்துவிட நெப்போலியன் திட்டமிட்டார். இதற்காக "கண்டத் திட்டம்" (Continental system) ஒன்றை ஏற்படுத்தினார். பிரிட்டனின் கடல் வணிகம் தடைசெய்யப் பட்டுவிட்டால் நெப்போலியனுக்கு பிரிட்டன் அடிபணிந்து விடும் என்று கருதினார். பிரிட்டன் தன் கடலாதிக்கத்தைப் பயன்படுத்தி வேறெந்த நாடுகளுடனும் வணிகத் தொடர்பு வைத்துக் கொள்ளக் கூடாது என நெப்போலியன் கட்டளைகளை அறிவித்தார். இக்கட்டளைகள் பெர்லின் கட்டளை, வார்சா கட்டளை, திரையனான் தீர்வை, பான்டெயினி புளூ கட்டளை என்பனவாகும். இக்கட்டளைகளால் பிரிட்டனின் வணிகத் தொடர்பு திருட்டுத்தனமாகியது. இத்திருட்டுத்தனத்தைக் கட்டுப்படுத்தக் கடற்கரை வணிகத் தலங்களை நெப்போலியன் தன்னுடைய ஆதிக்கத்திற்குக் கொண்டுவந்தார்.

கி. பி. 1812 இல் மாஸ்கோ நகர் போர் தொடங்கியது. 6,00,000 பேர் இப்போரில் மாண்டனர். மாஸ்கோ படைகள் பின்வாங்கின. குளிர்காலப் போர் என்தால் பல்லாயிரம் வீரர்கள் இறந்தனர். இப்போரினைக் கண்ட இங்கிலாந்து, ஆஸ்திரியா, ஸ்பெயின், பிரசியா, சுவீடன் போன்ற நாடுகளுடன் சேர்ந்துகொண்டு நெப்போலியனுக்கு எதிராகப் போர் தொடங்கியது. கி. பி. 1813 இல் லிப்சிக் (Leipzig) என்னும் இடத்தில் போர் நிகழ்ந்தது. இதில் முதலாம் நெப்போலியன் மாபெரும் தோல்வியைச் சந்தித்தார். தன் பதவியைத் துறந்தார். கி.பி. 1813-இல் நடைபெற்ற லிப்சிக் போர் முதலாம் நெப்போலியனுடைய பதவியையும், புகழையும் இழக்கச் செய்தது. இதனால் எல்பா (Elba) தீவிற்குச் சென்றார். பின்னர் இறுதி முயற்சியாக கி.பி. 1814 -இல் மீண்டும் ஒரு சிறுபடையைத் திரட்டிப் போரிட்டார். ஆனால் தோல்வியே இவருக்கு ஏற்பட்டது. கி.பி. 1815-இல் மீண்டும் ஒரு சிறு படையைத் திரட்டி வாட்டர்லூ (Watereloo) என்னும் இடத்தில் போரிட்டார். இப்போர் முதலாம் நெப்போலியனுடைய இறுதிப்போராகும். இப்போரில் முழுமையாக நெப்போலியன் தோற்கடிக்கப்பட்டார். இத்தோல்வியால் முதலாம் நெப்போலியன் போனபார்ட்டு ஆங்கிலேயரிடம் சிறைப்படுத்தப்

பட்டார். எளிதில் தப்பிச் செல்ல வாய்ப்பில்லாத புனித எலினா (St. Helena) என்னும் தீவில் முதலாம் நெப்போலியன் போனபார்ட் சிறைவைக்கப்பட்டார். இம்மாபெரும் வீரன் தனது இறுதிக் காலத்தை இத்தீவில் கழித்தார்.

## மனோரா கல்வெட்டும் நெப்போலியன் தோல்வியும்

ஆங்கிலேயரின் வெற்றியைச் சிறப்பித்தும் மகிழ்ந்தும் நெப்போலியன் போனபார்ட்டின் தோல்வியை நினைவுகூர்ந்தும் இந்த உப்பரிகையை மராட்டிய மாமன்னர் இரண்டாம் சரபோஜி கட்டினார் என்று குறிப்பிடும் மனோரா கல்வெட்டில் சுட்டப்படும் ஆண்டு கி.பி. 1814 ஆகும். இக்கல்வெட்டில் குறிப்பிடப்படும் போர் கி.பி. 1813-இல் லிப்சிக் (Leipzig) என்னும் இடத்தில் நடைபெற்ற நிகழ்வாகும். இங்குதான் முதலாம் நெப்போலியன் முதன் முதலில் மாபெரும் தோல்வியைச் சந்தித்தார். இப்போரின் விளைவாகவே பதவி இழந்தார். இப்போரில் ஆங்கிலேயர் பெற்ற வெற்றியே கீழ்த்திசை நாடுகளில் அவர்களது கடல் வணிகம் சிறக்க வழிவகுத்தது. பிரான்சுக்குரிய கடல்வணிகம் தளர்ந்தது. இதனால் ஆங்கிலேயரின் ஆதிக்கம் பரவியது. நெப்போலியன் மீதும் அவனது செயல் முறைகள் குறித்தும் ஆங்கிலேயரின் விளம்பரங்களும் செய்திகளும் அக்காலக்கட்டத்தில் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்கின. எனவே, மன்னர் இரண்டாம் சரபோஜி ஆங்கிலேயரின் மீது கொண்ட ஆர்வத்தாலும் கடல்வணிகம் மற்றும் கடற்கட்டுமானப் பணிகளின் ஈடுபாட்டாலும் நெப்போலியனுடைய லிப்சிக் போரின் நினைவாக ஒரு கடற்படைக் கோட்டையைச் சாளுவநாயக்கன் பட்டினப் பகுதியில் கட்டியுள்ளார். இக்கட்டடத்தை காண்பதோடு அதன் வரலாற்றுப் பின்புலம் அறிவதும் பயனுள்ள ஒன்றாகும்.



நெப்போலியன்

# சாளுவநாயக்கன் பட்டினத் துறைமுகம்

தொன்மையான துறைமுகப்பட்டினங்கள், கடல்வழித் தொடர்புகள் போன்றவற்றை விவரிப்பதும் அவற்றின் வரலாற்றை எழுதுவதும் இங்கு நோக்கமன்று. ஆனால் தொன்மையான துறைமுகங்கள் சிலவற்றை பற்றி சுருக்கமாகக் கூறின் அது தமிழகத்தின் கடல்வணிகச் சிறப்பை உணர்த்தும்.

காயற்பட்டினம்-இது பாண்டியரின் புகழ்மிக்க துறைமுகங்களில் ஒன்று. இத்துறைமுகத்தை மார்கோபோலோ கி.பி.13-ஆம் நூற்றாண்டில் பார்வையிட்ட செய்தியைக் குறிப்பிடுகின்றார். இத்துறைமுகத்திற்கு அரேபியரின் குதிரைகள் இறக்குமதி செய்யப்பட்ட செய்திகளைக் குறிப்பிடுகின்றார். மற்றொரு வரலாற்று ஆவணம் சீனப் பயணியரின் வருகை பற்றிய செய்தியைக் கூறுகின்றது.

கொற்கைத் துறைமுகம் மற்றொரு புகழ்பெற்ற துறைமுக மாகும். இங்கிருந்து முத்துக்களும் மணிகளும், நறுமணப் பொருட் களும் ஏற்றுமதி செய்யப்பட்டன என்பதைத் தமிழ் இலக்கியங் களிலும் வெளிநாட்டவர் குறிப்புகளிலும் இருந்து அறிய முடிகிறது.

பெரியபட்டினம் என்னும் அழிந்துவிட்ட துறைமுகம் மண்டபத்திற்கு அருகே அமைந்த ஒன்றாம். இங்கு கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்த சீன மட்பாண்டப் பொருட்கள் உள்ளதைத் தமிழ்ப் பல்கலைக்கழகத் தொல்லியல் துறை கண்டு பிடித்துள்ளது. இந்நூலாசிரியரும் இவர்களின் அகழ்வாய்வின்போது சென்று அவர்கைளப் பார்வையிட்டுள்ளார்.

அழகன்குளம் துறைமுகம் கடல்கொண்ட துறைமுகங்களில் ஒன்று. இங்கு சங்கு வளையல்கள், ரோமானியரின் மட்கலன்கள் நிரம்பக்கிடைக்கின்றன என்பதால் இத்துறைமுகத்துக்கும் பல்வேறு நாட்டவர் இங்கு வந்து சென்றுள்ளனர் என்பதை அறியமுடிகிறது. இத்துறைமுகம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் சிறப்புப்பெற்றிருந்தது எனக் கருதலாம்.

நாகப்பட்டினம் அல்லது நிகமா துறைமுகம் சோழ மண்டலத்திருந்த பழமையான துறைமுகங்களில் ஒன்றாகும்.

துத்துறைமுகத்தை மார்க்கோபோலோ 'பட்டன்' என்றும் தாலமி 'நிகமா' என்றும் சீனப் பயணியின் குறிப்பில் 'நாகவதனா' என்றும் பெயரிட்டுக் குறிப்பிட்டுள்ளனர். இத்தகைய சிறப்பிற்குரிய இத்துறைமுகம் போர்ச்சுக்கீசியர்கள், டச்சுக்காரர்கள், ஆங்கிலேயர்கள் ஆகியோரின் ஆதிக்கத்தில் இருந்திருக்கின்றது என்பது வரலாறு காட்டும் செய்திகளாகும். நாகப்பட்டினம் சீனத் தொடர்புடைய நகரமாக இருந்துள்ளது. இங்கு 'புத்த விகாரம்' ஒன்றைக்கட்டி சிறப்புச் செய்த செய்திகளையும் தமிழ்வரலாறு பாதுகாத்து வருகின்றது. 1867 இல் புத்த விகாரம் இருந்த செய்தியை கிறித்துவ ஆவணங்களின் வாயிலாகவும் அறியமுடிகின்றது. இதன் அருகே நாகூர், காரைக்கால் பகுதிகள் வெளிநாட்டவர் தொடர்பும் வணிகச் சிறப்பும் பெற்றுத் திகழ்ந்தன என்பதை 17-18 ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்த ஆவணங்கள் கூறுகின்றன. இத்துறை முகப்பட்டினங்களுக்கு அருகே அமைந்த மற்றொரு வரலாற்றுச் சிறப்புடைய துறைமுகப் பட்டினம் தரங்கம்பாடியாகும். டச்சுக்காரரின் அதிகாரத்திற்கு விடப்பட்டு அவர்களின் கோட்டையும் குடியிருப்புக்களும் தோன்றின. ஐரோப்பிய வணிகக் குழுவின் வணிகம் நிலை மாறி ஆட்சி மாறிச் சென்றமையால் இங்குள்ள பல கட்டடங்கள் சிதைந்துவிட்டன. சில கட்டடங்கள் செப்பனிடப்பட்டு இன்றும் காலனியர்களின் வணிக வரலாற்றின் சின்னங்களாக உள்ளன.

காவிரிப்பூம்பட்டினம் என்று அழைக்கப்படும் பூம்புகார் தமிழர் வரலாற்றில் ஒரு மைல் கல்லாகும். தமிழ்ப் பண்பாட்டை, வரலாற்றை, அவர்தம் வெற்றியைச் செல்வச் செழிப்பை, ஒருவர் கூறமுற்பட்டால் அவர்கள் காவிரிப்பூம்பட்டினத்தைச் ஒதுக்கிவிட இயலாது. தமிழர் வரலாற்றில் இது ஒரு சக்கரத்தின் அச்சுப்போன்று விளங்குகின்றது. இதன் மாட்சிச் செழுமை பற்றி சிலப்பதிகாரம் தெளிவாகக் கூறும். ஏற்றுமதி இறக்குமதி எவ்வாறு நடைபெற்றது; பொருட்களை எவ்வாறு சேமித்து வைத்திருந்தனர்; சிதறிய பொருட்கள் எங்ஙனம் பரந்து கிடந்தன என்பது குறித்துப் பல்வேறு செய்திகள் உள்ளன. இத்தகு சிறப்பிற்குரிய இத்துறைமுகம் கி.மு. 3 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 2 ஆம் நூற்றாண்டு வரை மிகச் சிறப்புடன் திகழ்ந்தமையைச் சங்க இலக்கியங்கள் சாற்றும். எனவே, தமிழரின் வரலாற்றில் துறைமுகப்பட்டினங்கள் பல இருந்துள்ளன. உலகெங்கிலிருந்தும் வருகின்ற கப்பல்களை வரவேற்று, வணிகத் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டனர். இதன் வாயிலாகத் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் மிகுதியான தமிழர் குடியேற்றங்கள் தோன்றின. தமிழரின் கலை, பண்பாடு தமிழ் மண்ணைவிட்டு

உலகெங்கிலும் தன் கிளைகளைப் பரப்பி ஆல்போல் தழைத்து, அருகுபோல் வேரூன்றி நிற்கும் மாட்சியை, இன்றைய உலகிலும் நாம் காண்கிறோம். இத்தகைய தொடர்ச்சியான வரலாற்றுச் சிறப்புடைய தமிழகக் கடல் வணிகத் தொடர்பு மராட்டியரின் ஆட்சியின்போதும் நிகழ்ந்திருந்தது என்பது தெளிவான வரலாற்றுச் செய்தியாகும். இதில் சிறப்பிடம் பெறுவது மனோராக் கோட்டையாகும். இது துறைமுகப்பட்டினமாகவும் கப்பல் கட்டும் தளமாகவும் சிறந்து இருந்துள்ளது என்பதை ஆவணங்களின் வாயிலாக அறிய முடிகின்றது. கப்பல் கட்டும் தொழில் யவனர்கள், சோனகர்களின் வருகைக்குப் பிறகு தமிழகத்தில் ஒரு மிகப் பெரிய மாற்றத்தையும் கடல் வணிகத் தொடர்பையும் ஏற்படுத்துவதற்கு வழிவகுத்தது எனக் கூறலாம்.

## துறைமுகப்பட்டினம்

மனோராக் கோட்டை கட்டப்பட்டுள்ள சாளுவநாயக்கன் பட்டினத்தின் ஒரு பகுதியாக அருகே அமைந்த சேதுபாவாசத்திரம் அதன் புற இடங்களில் ஆங்கிலேயருக்கு வீடுகளும், தங்கும் மாளிகைகளும் கட்டப்பட்டிருந்தன என்பதை மோடி ஆவணங்கள் எடுத்துக் காட்டுகின்றன. சாளுவநாயக்கன் பட்டினத்திற்கு வேலை செய்ய உறமித்கான் என்ற பணியாள் அனுப்பி வைக்கப்பட்ட செய்தியை மோடி ஆவணம் கூறுகின்றது (16-59). இங்கு ஜான்பாதரின் வீட்டிற்கு அருகேயுள்ள வீட்டைத் தயார் செய்ய 70 அங்கணம் பந்தல் போடுவதற்கு மூங்கில் 300-ம், கீத்து 8000-ம், 200 பாய்களும் கொடுப்பதற்கு உத்தரவு என்ற குறிப்பும் (11-188) மோடி ஆவணத்தின் வாயிலாகக் கிடைப்பதால் இப்பகுதியை ஆங்கிலேயரின் இருப்பிடங்களுக்குக் கொடுத்தமை தெளிவு. இதனை மனோராக் கட்டடத்தின் காவலன், மராட்டிய மன்னருக்கு விண்ணப்பித்த இரண்டு கடிதங்களும் காட்டுகின்றன.

சாளுவநாயக்கன் பட்டினத்துக்கு மிக அருகே அமைந்துள்ள மற்றொரு ஆங்கிலக் குடியிருப்பாகிய சேதுபாவாசத்திரத்தைச் சாளுவநாயக்கன் பட்டினத்தின் ஒரு பகுதியாகக் கருதலாம். இங்கு ஆங்கிலேயருக்குத் தங்கும் விடுதிகளை மன்னர் இரண்டாம் சரபோசி கட்டிக் கொடுத்துள்ளார். சாளுவநாயக்கன் பட்டினத்தின் கடைசி முனைப் பகுதியாக சேதுபாவாசத்திரம் அமைகின்றது என்பதால் இவ்விரண்டு இடங்களுக்கும் இடைப்பட்ட கடற்கரைப் பகுதிகளில் வணிகத் தொடர்புடைய கப்பல்கள் இங்கு வந்து சென்றுள்ளன என்பதை உணர முடிகின்றது. ஏனெனில் இங்குள்ள சிதைந்த கட்டடங்கள், எச்சங்கள் இதை உறுதி செய்கின்றன.

## மராட்டிய அரசின் கப்பல்கள்

தஞ்சை மராட்டியர் காலத்தில் நாகப்பட்டினம், சாளுவநாயக்கன் பட்டினம் ஆகிய இரண்டு துறைமுகங்களும் சிறப்புப் பெற்றுத் திகழ்ந்தன. நாகப்பட்டினத்திலிருந்து வெளிநாடுகளுக்கும் கப்பல்கள் சென்றுவந்துள்ளன என்பதை இலங்கை ஆவணங்களும் குறிப்பிடுகின்றன. இலங்கையிலிருந்து மரங்கள் மிகுதியாக இறக்குமதி செய்யப் பட்டன என்பதை மோடி ஆவணங்கள் சுட்டுகின்றன. எனவே மராட்டியரின் ஆட்சியின்போது அரசுக்குரிய கப்பல்கள் இருந்துள்ளன என்பதை அறியமுடிகின்றது.

## பிரகதீசுவரர்

தஞ்சை மராட்டிய மன்னர் இரண்டாம் சரபோசியின் காலத்தில் புகழ் பெற்ற பெரிய கப்பல்களில் ஒன்று 'பிரகதீசுவரர்' ஆகும். மராட்டிய மன்னர்கள் தஞ்சைப் பெரிய கோயிலின் சிறப்பு அறிந்து, அவரது திருநாமத்தையே தன் கப்பலுக்குச் சூட்டிய பண்பு பாராட்டுதற்குரியது. இச்செயல் இவர்கள் இந்த மண்ணை நேசித்தமையின் வெளிப்பாடு. பிரகதீசுவரர் என்னும் பெயர் உலகம் அறியச் செய்தல் வேண்டும் என்பதே இதன் முதன்மைக் காரணமாகவும் இருக்கக்கூடும்.

## பிரசாத்

மன்னர் இரண்டாம் சரபோசியின் காலத்தில் இருந்த மற்றொரு கப்பல் பிரசாத் ஆகும். பிரசாத் கப்பல் பிரகதீசுவரர் கப்பலைவிடச் சற்றுச் சிறிய அளவுடையதாகக் கருதலாம். இவ்விரண்டு கப்பல்களின் பெயர் மட்டும் தெரிகின்றன. இவை அன்றிப் பல்வேறு சிறிய படகுகளும், கப்பல்களும் இருந்திருக்க வேண்டும். ஏனெனில் உள்நாட்டுப் போக்குவரத்திற்குக் கொள்ளிடம், காவிரி நதி வழிகள் பயன்பட்டுள்ளன என்பதை மோடி ஆவணங்கள் தெரிவிக்கின்றன.

## உள்நாட்டுப் போக்குவரத்து

மன்னர் இரண்டாம் சரபோசியின் காலத்தில் படகுப் போக்குவரத்து சிறப்பு நிலையை அடைந்திருந்தது எனக் கூறலாம். கோடியக்கரை, அணைக்கரைப் பகுதியிலிருந்து திருவையாற்றிற்கும் நாகப்பட்டினத்திலிருந்து தஞ்சாவூருக்கும் கொள்ளிடம் நதியில் திருமழபாடிக்கும் உள்நாட்டுப் படகுப் போக்குவரத்து இருந்துள்ளது. இதுபோல் வைத்தியநாதன் பேட்டைக்கும் வழித் தடங்களை அமைத்திருந்தனர். மற்றொரு வழி கோயிலடியைச் சார்ந்த பகுதியாகும். இவர்களது ஆட்சிக்காலத்தில் திருவையாறு

படகுத்துறை, வெண்ணாற்றங்கரைப் படகுத்துறை, கோடியக்கரை படகுத்துறை, அணைக்கரைப் படகுத்துறை போன்றவை சிறப்பிடம் பெற்றன. கோடியக்கரையிலிருந்து சாளுவநாயக்கன்பட்டினத்திற்குப் படகுப் போக்குவரத்து இருந்துள்ளது. சாளுவ நாயக்கன் பட்டினம் படகுத்துறை என்ற நிலை மாறி கப்பல் கட்டும் துறைமுகமாகப் பின்னர் விளங்கிற்று.

ஓடங்கள், பரிசல்கள், படகுகள் கட்டும் பணி திருவையாற்றில் நடைபெற்று வந்துள்ளது. போக்குவரத்திற்குச் சுங்கம் வசூலிக்கப் பட்டிருந்திருக்கின்றது. சிறிய துறைமுகங்கள் என நாகூர் பந்தர் துறைமுகம், திருமலைவாசல் துறைமுகம் என்பனவற்றைக் குறிப்பிடும் மோடி ஆவணங்கள் உள்ளன. (1777, 85, 35:8) இங்கிருந்து சென்னைபட்டினம் செல்லக் கப்பல் போக்குவரத்து இருந்துள்ளது. 'மிஸ்தர் தான்வேல் ஸாமர்யேன்' என்னும் ஆங்கிலேயர் தஞ்சாவூர் கோட்டைக்கு வந்து பின்னர் சென்னை சென்ற செய்தியும் மேலே குறிப்பிட்ட மோடி ஆவணக்குறிப்பில் இருக்கின்றது. படகுகள் வாடகைக்கு விடப்பட்டன என்ற செய்தியும் மோடி ஆவணக்குறிப்பில் இருக்கின்றது. எனவே, உள்நாட்டுப் போக்குவரத்திற்குப் படகு, ஓடங்களே மிகுதியாகப் பயன்படுத்தப் பட்டன என்பதையும் ஆற்றைக் கடக்க பொதுமக்கள் பெரிதும் துன்பப்பட்டனர் என்பதையும் மோடி ஆவணங்கள் கூறுகின்றன. இத்துன்பத்தைப் போக்கவே பாலங்களைக் கட்ட மராட்டிய மன்னர்கள் முயன்றனர்.

### கப்பல் கட்டுமானம்

சாளுவநாயக்கன் பட்டினம் கப்பல் கட்டுமானம் செய்கின்ற ஒரு தனிச் சிறப்பிற்குரிய இடமாகத் திகழ்ந்தது. இங்கு படகு, ஓடம், பரிசல், பாய்மரக்கப்பல், கப்பல்கள் கட்டப்பட்டன. மன்னர் இரண்டாம் சரபோசி கல்கத்தா நகருக்குச் சென்றபொழுது அங்கு கப்பல் கட்டும் பெரிய பணிக் கூடத்தைப் பார்வையிட்டுள்ளார். அங்கிருந்து வரும்பொழுது கப்பல்கட்டும் தொழில் நுட்பத்தைக் கூறும் நூல்களை வாங்கிக்கொணர்ந்துள்ளார். கப்பல் கட்டுமானத் தொழில்நுட்பம் குறித்த நூல்களை ஒரு தனி நூலகமாக மனோர்ராக் கட்டடத்தில் வைத்திருந்தார். பல்வேறு நாடுகளிலிருந்தும் வாங்கிய கப்பல் பற்றிய நூல்களைத் தனியே வைத்து ஒரு 'அறிவியல் நூலகமாக' ஆக்கிய சிறப்பு மன்னர் இரண்டாம் சரபோசிக்குரியது.

கப்பல் கட்டுவதற்குரிய தொழில்நுட்பம் தெரிந்த பணியாளர்கள் அங்கிருந்துள்ளனர். கப்பல்களில் சென்று பயண அனுபவம் பெற்ற ஒருவர் வழி காட்டியாக இருந்துள்ளார். சேது

பாவாசத்திரத்தில் இருக்கும் பங்களாவில் இவர் இருந்துள்ளார் என்பதை 'நேமணுக சேவகம் பார்க்கின்றவர் கோவிந்தப்ப நாயக்கன்' என்று மோடி ஆவணம் குறிப்பிடுகின்றது. 'நேமணுக' என்னும் மராட்டியச் சொல்லிற்கு 'வழிகாட்டி', 'உடன் செல்பவர்' எனப் பொருள்படும். ஆவணத்தில் காணப்படும் சாளுவநாயக்கன் பட்டினம் உமர்சாவும் கப்பல் தொழில்நுட்பம் தெரிந்தவராக இருக்கக்கூடும்.

சாளுவநாயக்கன் பட்டினத்தில் இரும்பு வேலை மரவேலை செய்கின்ற பணியாளர்கள் இருந்துள்ளனர். இங்கு கப்பலுக்குரிய இரும்புச்சாமான்கள், நங்கூரம் போன்றவை செய்யப்பட்டன. மனோராக் கட்டடத்தின் முன் பகுதியிலுள்ள கடற்கரை மணல் வெளிகளில் சிறியசிறிய இரும்புத் துண்டுகள் ஆங்காங்குப் பரவலாக பரந்து காணப்படுகின்றன. இந்த எச்சங்களைக் காணும்பொழுது அங்கு ஒரு பெரிய இரும்புப் பட்டரை இருந்திருக்கக்கூடும். மரங்கள் கோடியக்கரை, இலங்கையிலிருந்து பெற்றிருக்கவேண்டும். ஏனெனில் கப்பல் கட்டுவதற்குச் 'சுரபுன்னை' மரங்கள் பயன்பட்டன என்றும் இவற்றைப் பயன்படுத்திச் சாளுவநாயக்கன்பட்டினத்தில் கப்பல்கள் கட்டப்பட்டன என்றும் மோடி ஆவணங்கள் குறிப்பிடுகின்றன (1822:2-102). மற்றொரு ஆவணம் (1822:10-74) பெரிய கப்பலின் வேலையும் பழக்கப்படி நடந்து கொண்டிருக்கிறது என்ற செய்தியாலும் இங்குக் கப்பல்கட்டும் பணி சிறப்பாக நடைபெற்றி ருந்திருக்க வேண்டும் எனக் கருதலாம். இதனை அடுத்து 1926-ஆம் ஆண்டுக் குறிப்பு ஒன்றில் (1826:4-436) சாளுவநாயக்கன் பட்டினத்தில் அரண்மனையாருக்குக் கப்பல்கள் இருந்ததாகத் தெரிகின்றது என்ற குறிப்பால் 1826-ஆம் ஆண்டுகளில் கப்பல் போக்குவரத்து இப்பகுதியில் சிறப்பாக இருந்துள்ளது என்பது தெளிவாகின்றது. மற்றொரு குறிப்பில், ஆங்கிலேயர் சரபேந்திர ராசபட்டினம் வந்திருக்கிறார்கள், அதுபோழ்து சாளுவநாயக்கன் பட்டினத்தி லிருந்த கப்பலைக் கண்டனர் என்றும் அதன் பின்னர் அக்கப்பலை வாடகைக்கு அமர்த்திக் கொள்ள விரும்பினர் என்ற செய்தியும் 1838 சனவரி 25 ஆம் நாளிட்ட ஆவணத்தின் வாயிலாகப் புலப்படுகின்றது. எனவே, தஞ்சையை ஆட்சி செய்த சத்ரபதி சிவாஜிசாகேப் அவர்களின் ஆட்சிக்காலமாகிய (கி.1832-1855) வரை கப்பல் வணிகம் சிறப்பாக இருந்திருக்க வேண்டும் எனக் கருதலாம். இந்த ஆவணத்தின் மூலம் கப்பல் புறப்படும் பொழுது கோழியைப் பலி கொடுத்துவிட்டுப் புறப்படுவது என்ற பழக்கத்தை அறியமுடிகின்றது.

**கப்பல் சண்டை**

கி.பி. 1777 ஆம் ஆண்டினைச் சேர்ந்த மோடி ஆவணக்குறிப்பில்:

> "அதிராம்பட்டினம் வியாபாரி கப்பலில் அரிசியை ஏற்றிக் கொழும்புக்குச் சென்று திரும்புங்கால் கொட்டைப்பாக்கு ஏற்றிவந்தான். காற்றினால் கப்பல் தத்தளித்தது. இராமநாதபுரம் தாலுகாவின் மணியக்காரன் நான்கு துப்பாக்கிக்காரர்களை அனுப்பிப் படகோட்டியை அடித்துப் பொருள்களை எடுத்துச் செல்ல முயன்றான். நாம் அப் பொருள்களை விட்டு விடாமல் சம்புமகாதேவி பட்டணத்தில் வைத்திருக்கிறோம்; இராமநாதபுரம் கோட்டைத் துப்பாக்கிக்காரர்களும் இருக்கின்றனர்; மாலுமியைப் பிடித்துக் காவலில் வைத்திருக்கிறார்கள். கும்பினி துப்பாக்கிக்காரர்களும் மருந்து குண்டுகளைக் கொண்டு பண்ணையைப் பலவந்தமாகப் பிடிக்க இராமநாதபுரத்துக்கு எழுதியுள்ளார்கள்" (177:1, 147-149)

எனவரும் செய்திகளால் கொழும்பிற்கும் அதிராம்பட்டினத்திற்கும் இடையே வணிகப் போக்குவரத்து இருந்துள்ளது என்பதும் அக்காலத்தில் பாக்கு இறக்குமதி செய்யப் பட்ட செய்தியும் கிடைக் கின்றது. மேலும் இப்பகுதியில் இராமநாதபுரம் அரசுக்கும், தஞ்சை அரசுக்குமிடையே ஏற்பட்ட பகைமைகளையும் அறியமுடிகின்றது.

மற்றொரு மோடி ஆவணத்தில் தஞ்சை மராட்டிய மன்னருக்கு வந்த கப்பலைப் பிடித்துக் கொண்ட செய்தியும் கிடைக்கின்றது.

> "....நாகபட்டினத்திலிருந்து மஹாராஜாவுக்கு பெஷ்கஷ் கொடுக்க வேண்டிய ஆணை கப்பலில் வந்துகொண்டிருந்த அந்த கப்பலை றாமனாதபுரத்து யெல்லை சறஹத்துலே வந்துசென்று றாமனாத புறத்தான் அந்த ஆணையைப் பிடித்துக் கொண்டு அந்த ஆணை மஹாராஜாவுதென்று தெரிஞ்சும் கொடாமல் படிக்கு வைத்துக் கொண்டிருந்தபடியினாலே மஹாராஜா வுக்குக் கோபம் வந்து றாமனாதபுரத்தின் மேலே பாளைய மெடுத்து அந்த கோட்டை கை வசமாகிய சமையத்தில் துளஜி மஹாராஜா தூரயோசினை பண்ணி றாமனாதபுரத்தானுக்கு அவன் கோட்டையை நிலைக்கப்பண்ணி தம்முடைய பாளையத்துக்கு சென்ண சிலவுயென்று நஜர் யென்றும் கொஞ்சம் திரவியம் வாங்கிக் கொண்டு தஞ்சாவூர் வந்து சேர்ந்து உடனே தம்முடைய கன்னியை காட்டிகேறாவுக்கு வெகுதிரவியம் செலவழித்து விவாகம் பண்ணிவைத்தார்" (கே. எம். வெங்கடராமையா 1987:131)

இச்செய்தியால் தஞ்சை மராட்டியருக்கும் இராமநாதபுரம் அரசருக்குமிடையே கடல் எல்லைப் போரும் நிகழ்ந்துள்ளது எனக் கருதலாம். எனவே சாளுவ நாயக்கன் பட்டினத்துறைமுகம் கோட்டை வசதியுடன் அமைக்கப்பட்டது என்பது தெளிவாகிறது. இதனால் அதிராம்பட்டனத்து வழியிலும் கோடியக்கரை வழியிலும் எவ்வகையான இடையூறின்றி நடைபெறுவதற்குச் சாளுவநாயக்கன் பட்டினத்துறைமுகம் செயல்பட்டிருக்க வேண்டும் என உணரலாம்.

### சபர் போதல்

சபர் என்னும் சொல் உருது மொழியிலிருந்து வந்ததாகும். 'சபர்' என்பதற்கு 'முன்செல்லக்கூடியவர்', 'நடத்திச் செல்லக் கூடியவர்' என்ற பொருளில் அமைவதாகக் கூறலாம். சபர் போதல் என்பது 'முன்நின்று நடத்திச் செல்லக்கூடியவர்' 'போதல்' என்ற நிலையில் ஒரு பணியாளராகப் பணிக்கப் பட்டிருக்கலாம். மோடி ஆவணக் குறிப்பு ஒன்றில்,

> "கொழும்பு யாழ்ப்பாணம் முதலிய இடங்களுக்குத்
> தோணியில் சபர் போகச் சொல்லி உத்தரவு
> கொடுத்தார்கள்"

என்ற செய்தி கிடைக்கின்றது. மற்றொரு செய்தியாக,

> "பாளையக்காரர்கள், சங்கு குளிக்கிறவர்கள்
> முதலான பேர்களைப் போகச் சொன்னதற்கு
> ஒருவரும் போகவில்லை என்றும், இருவர் மட்டும்
> போனதாகவும், மூன்று ஆண்டுக்காலம் 'சபர்'
> செய்து வந்ததாகவும், அதற்குச் சொற்பச்
> சம்பளம்"

என்றும் மற்றொரு மோடி ஆவணம் கூறுகின்றது. எனவே, சாளுவநாயக்கன் பட்டினத்தில் சபர் போதலுக்குரியவர்கள் இருந்துள்ளனர் எனக் கருதலாம்.

### சங்கெடுத்தல்

'சங்கு குளிக்கிறவர்கள்' எனவரும் தொடரால் இப்பகுதியில் சங்கெடுத்தல் தொழில் நடைபெற்றிருந்தது என்பது புலப்படுகின்றது. இதை உறுதி செய்யும் வண்ணம் இத்தொழில் செய்பவர்கட்கு ஆயிரத்துக்கு 12 சக்கரம் 5 பணம் கொடுத்து வந்ததாகவும், பிறர் 14 சக்கரம் கொடுப்பதால் சர்க்காரும் 14 பணம் தரவேண்டும் என்றும் ஆதம் முத்துத்துரை என்பவர் சர்க்காருக்கு 1780 இல் விண்ணப்பித்துள்ளார் (1780-3-164; 7-539) என்பதை மோடி ஆவணம் உறுதி செய்கின்றது.

முத்தெடுத்தல், முத்தெடுத்துச் சென்ற கப்பல்கள் பற்றிய செய்திகளும் உள்ளன. இது மராட்டியர் ஆட்சிக் காலத்தின்போது நிகழ்ந்த முத்தெடுத்தல் தொழிலை நமக்கு உணர்த்துகின்றது. கொல்பேனா, மாலக்கா துறைமுகங்களுக்கு முத்துச்சிப்பிகள் ஏற்றுமதியாகியுள்ளன (1806. 2-120, 121). மலாக்கா தீவு சுமத்ராவுக்குக் கிழக்கே மலேசியா தீபகற்பத்திற்கு மேற்கே அமைந்துள்ளதாகும். இத்துறைமுகங்களுக்கு முத்துச்சிப்பி 15 தூக்கு, சாமிநாத செட்டியாரின் கப்பலில் நாகூர்த்துறைமுகத்திலிருந்து ஏற்றியனுப்பினர் என்ற குறிப்பும் அதில் இடம் பெறுகின்றது. மற்றொரு குறிப்பில் ஸேக் மயாரன்கதா என்பவருடைய கப்பலில் முத்துச்சிப்பி 5 தூக்கு அனுப்பப்பெற்றது என்றும், இவ்வாறு இவ்விரண்டு கப்பல்களில் ஏற்றி அனுப்பி வைக்கப்பட்ட சரக்கின் மதிப்பு 3344 1/4 வராகன் என்றும் இதற்குரிய ஏற்றுக்கூலி மொத்த மதிப்புக்குரிய தொகையில் ஐந்து விழுக்காடாகும் என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

### கல்கத்தாவில் கப்பல் கட்டுமிடத்தைப் பார்வையிடுதல்

கி.பி. 1821-இல் மராட்டிய மாமன்னர் இரண்டாம் சரபோசி காசியாத்திரை சென்றார். இவரது காசிப்பயணம் சாளுவநாயக்கன் பட்டினத்திற்குப் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியதாகக் கூறலாம். 1821 ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் ஐந்தாம் நாள் கல்கத்தாவில் கப்பல் கட்டும் மிகப் பெரிய நிறுவனத்தைச் சென்று பார்வையிட்டுள்ளார். அக்கப்பல் கட்டும் இடத்தைப் பற்றி, “அங்குக் கப்பலின் நீள அகலத்துக்குத் தகுந்தபடி ஒரு பள்ளம்; கப்பலின் உயரத்துக்குத் தக்கபடி ஆழம்; சுற்றிலும் இறங்குவதற்குரிய படிகள்; கப்பலுக்கு நங்கூரம் அப்பள்ளத்திற்கு மேற்புறம் கங்கையாறு; ஆற்றுநீர் பள்ளத்திற்கு வராமலிருக்கப் பலவகைக் கதவுகள்; ஊற்றுநீர் தேங்கினால் அந்நீரை அப்புறப் படுத்தும் குழாய்கள்; கப்பல் வேலை முடிந்ததும் கதவுகளைத் திறந்தால் கங்கையாற்று வெள்ளம் வந்து நிரம்பும்; கப்பலை எளிமையாகக் கங்கையாற்றுக்குக் கொண்டு செல்ல முடியும்'' (கே. எம். வெங்கடராமையா 1984:392) என்று அங்கு கண்ட காட்சியை 25.7.1821 ஆம் நாளிட்ட கடிதத்தில் எழுதியுள்ளார். (1821, 5-151, 152).

காசியாத்திரை சென்று, அங்குக் கப்பல் கட்டும் தொழில்நுட்பத்தை அறிந்து அவர்களது திறமையைப் பாராட்டிய மன்னர் இரண்டாம் சரபோசி, கப்பல் கட்டும் தொழில் நுட்பத்தில் திறமையுள்ள ஆங்கிலேயரை ரூ. 180/- சம்பளத்தில் நியமித்தார். கல்கத்தாவில் கப்பல் கட்டும் பணியில் ஈடுபட்டிருந்த இந்த

ஆங்கிலேயர் பின்னர் சாளுவ நாயக்கன்பட்டினத்திற்கு அனுப்பிவைக்கப்பட்டார். இந்த ஆங்கிலேயரின் துணைக்குத் தஞ்சாவூர்க் கோட்டை பொதுமராமத்து இலாக்காவிலிருந்து திறமையான பணியாளர்கள் அனுப்பிவைக்கப்பட்டனர். தச்சர், கொல்லர் இதில் அடங்குவர் (1821: 5-63).

கி.பி. 1822 இல் சாளுவநாயக்கன் பட்டினத்தில் கப்பல் கட்டும் பணி பெரிய அளவில் நடைபெற்றிருக்க வேண்டும். மராட்டிய மன்னர்களுடைய கப்பல்கள் எத்தனை என்ற செய்தி தெளிவாகக் கிடைக்கவில்லை. இதனால் மன்னர் சரபோசியின் காலத்திற்கு முன்னர் இருந்த கப்பல்கள் பற்றி அறியமுடியவில்லை. இருப்பினும் 1777-இல் நடைபெற்ற இராமநாதபுரம் அரசரின் கப்பல் தொடர்பான போரினைக் காணும்பொழுது மன்னர் துளஜாவின் ஆட்சியின் போது சிறிய அளவில் கப்பல்களும், படகுகளும், கட்டுமரங்களும் இருந்திருக்க வேண்டும் எனக் கருதலாம். ஏனெனில், 'பாய்மரக் கப்பல் 46 கரிசு ஏற்றுமதி செய்யக்கூடியது' எனத் தெரிவிக்கும் குறிப்பொன்று கிடைக்கின்றது. பொதுவாகக் கரசை, கரிசி, கரிசை, கரிசு இவை ஒரே அளவினைக் குறிக்கும் சொல் எனப் புலவர் வீ. சொக்கலிங்கம் குறிப்பிடுகின்றார். "கரசை என்பது 200 பறை அல்லது 400 மரக்கால் கொண்டதாகும். 400 மரக்காலுக்கும், 16 மூட்டைகள் எனல் பொருந்தும். ஆகவே, கரிசு 1க்கு 16 மூட்டைகள் எனில், 46 கரிசுக்கு 736 மூட்டைகள் ஆகும்" என்பதால் பாய்மரக் கப்பலில் ஏற்றப்படும் மூட்டைகளின் அளவு தெரிகின்றது. மேலும் 736 மூட்டைகளைச் சுமந்து சென்று, பின்னர் சென்ற இடங்களிலிருந்து பொருட்களைப் பெற்றும் வந்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

### கப்பல் அனுமதிச்சீட்டு

மராட்டியரின் ஆட்சிக்காலத்தில் ஆங்கிலேயரின் ஆதிக்கம் ஏற்பட்டு விட்டது. கடல் வணிகம் செய்வதற்குச் செல்லுகின்ற கப்பல்களுக்கு அனுமதிச் சீட்டு வழங்கும் முறை இருந்துள்ளது. இவ்வாறு வழங்கப்படும் சீட்டு "உரூ அல்லது உரூபாசு" என்று குறிக்கப்படுகின்றது.

> "சென்னைப்பட்டன கெவுறண்மேண்டாறிடத்தில்
> பெற்று வருகிற பாசை நான் உரூவில் வைத்துக்
> கொண்டு"

எனவரும் தொடரால், கப்பல்கள் வெளியிடங்களுக்குச் சென்று வருவதற்கு அனுமதிச் சீட்டுக்கள் வழங்கப்பட்டன என்பதையும்

இவை சென்னைப்பட்டணத்திலிருந்து வழங்கப்பட்டன என்பதையும் அறியமுடிகின்றது.

### வெளிநாட்டுத் தொடர்பு

கப்பல் போக்குவரத்துக்குரிய சிறந்த வசதிகளைச் சோழ மண்டலக் கடற்கரை பெற்றிருந்தது. மராட்டியரின் ஆட்சியின் போது, கொல்பேனா, மலாக்கா தீவுகளுக்கும், சாலமோன் முதலான தீவுகளுக்கும் சாளுவநாயக்கன்பட்டினத்திலிருந்தும் நாகையி லிருந்தும் கப்பல்கள் சென்றுள்ளன. “பாய் மரக்கப்பலை எடுத்துக் கொண்டு சாலமோன் ஐலண்டு முதலான தீவு தீவாரங்களுக்குச் செல்வோம்” என்று வரும் குறிப்பால் சுமித்திரா, மலேசியத் தீபகற்பங்களைத் தாண்டிச் சாலமேன் தீவுகள் வரை சென்று வந்துள்ளனர் என்பது தெளிவாகிறது. சாலமேன் தீவுகள் ஆஸ்திரேலியாவுக்கு அருகில் உள்ளன. இவை இங்கிருந்து சுமார் 6500 மைல்களுக்கு அப்பால் இருக்கின்றன. அக்காலத்தில் மலேசியா, ஆஸ்திரேலியா பகுதிகளுக்குக் கப்பல்கள் சென்று வந்துள்ளன என்பதை அறியும் பொழுது நம்முன்னோரின் கடல் வழிப் பயண முறைகளையும் ஆற்றலையும் பாராட்டுதல் தகும். சீனம், இந்தோனேசியா, ஆஸ்திரேலியா, ஜப்பான், நியூஜிலாந்து போன்ற நாட்டுப் பகுதிகளில் திராவிடர்களின் சின்னங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன என்பதும் இவ்வணிகத் தொடர்பின் தொன்மையைக் காட்டும்.

### கப்பல் பத்தாக்கூலி உடன்படிக்கை

இரண்டாம் சிவாஜியின் ஆட்சிக்காலத்தின் போது ஜேம்ஸ் என்பவருக்கு 7 ஆண்டுகளுக்குரிய வாடகை ஒப்பந்தம் (பத்தாக்கூலி) ஏற்பட்டிருந்துள்ளது. இந்த ஒப்பந்தத்திற்குப் பின்னர் தஞ்சை மன்னருக்கும் ஜேம்ஸ் ரோஸ் என்பவருக்கும் ஏற்பட்ட வழக்குகளை மோடி ஆவணங்கள் காட்டுகின்றன.

16.7.1838 இல் எழுதப்பட்ட இந்த ஒப்பந்த உடன்படிக்கை வரலாற்றுச் சிறப்புடையதாகும். இதில் ‘பிரகதீசுவர் பிரசாத்’ என்னும் பாய்மரக் கப்பலை பத்தாக்கூலி ஆண்டொன்றுக்கு ரூ. 6000; ஆண்டு தோறும் பழுதுபார்க்கும் செலவு ரூ. 400; போக மீதி ரூ. 5600 கொடுப்பது. ஸாலமன் தீவு முதலாகிய தீவுகட்குப் போய்க் கொண்டுவந்த பொருட்களில் சர்க்காருக்குத் தேவையான பொருட்களின் விலை போக எஞ்சிய தொகையை ஆண்டுதோறும் ஜூன் 17ஆம் நாள் செலுத்தவேண்டும். பழுதுபார்க்கும் செலவு 1200க்கும் மேற்பட்டால் அந்தப் பொழுதில் அந்த இடத்தில்

தொடர்புடையவர் எவராவது இருப்பின் அவரது கையொப்பத்துடன் கணக்கு அனுப்பி வைத்தால் பத்தாக்கூலியில் கழித்துக் கொள்ளப்படும். மேலும் எதிர்பாராது ஏற்படும் கப்பல் விபத்துக்களினால் ஆகும் இழப்புக்கள், கப்பலுக்கு உரியவர்களையே சாரும் எனக்குறிப்பிடும் இந்த ஆவணத்தில் நாகப்பட்டினத்தைச் சேர்ந்த மூவர் சாட்சிக் கையொப்பமிட்டவர்களாவார்கள்.

இந்த பத்தாக்கூலி உடன்படிக்கையில் பின்னர் கருத்து வேறுபாடு ஏற்பட்டுத் தஞ்சை மன்னருக்கும் ரோஸ் என்பவருக்கும் தொடர்ந்து கடிதங்கள் எழுதப்பட்ட செய்திகளை 4.1.1842 ஆம் ஆண்டு ஆவணங்கள் எடுத்துக் காட்டுகின்றன. ஜேம்ஸ் ரோஸ் என்னும் அந்த நபர் கி.பி. 1836 இல் மேஸ்டர் பீடன் என்பவரின் 'வெங்கிட்டரெட்டி' என்ற கப்பலையும், 1837இல் பலாநகர் அரசருடைய 'தவுலாத் பிரசாத்' என்ற கப்பலையும் இவர் பத்தாக் கூலியாகப் பெற்று நடத்தியவர் என்பதையும் ஆவணங்கள் கூறுகின்றன. இந்த பத்தாக் கூலி உடன்படிக்கையின் பத்திரம் 'பதினாறு ரூபாய்' என்ற இலச்சினையும், 'பொக்கிஷம்' என்ற இலச்சனையும் முன்பக்கத்தின் மேல் இருமூலைகளிலும் பொறிக்கப்பட்டு 'கப்பல் பத்தாக் கூலி உடன்படிக்கை' என்ற பெயரில் உள்ளது. இதிலுள்ள இலச்சினையில் தமிழ், தெலுங்கு, ஆங்கிலம் ஆகிய மொழிகள் இடம் பெற்றுள்ளன. எனவே, கி.பி. 1842க்குப் பிறகு தஞ்சை அரண்மனையார் கப்பல்கள் அழிவுற்றோ அல்லது விற்பனை செய்யப்பட்டோ இருக்கக்கூடும். இவர்களுடைய கப்பல்களின் கடைசிக் கால வரலாறு தெளிவாகக் கிடைக்கப்பெறவில்லை. இருப்பினும் கி.பி. 1777க்குப் பிறகு சாளுவநாயக்கன் பட்டினத் துறைமுகம் மராட்டிய மன்னர்களால் சிறப்படைந்து இருந்தது என்பது தெளிவாகின்றது. இதில் மன்னன் இரண்டாம் சரபோசியின் காலத்தில் நவீனமயமாக்கப்பட்டது என்பதையும் ஆவணங்கள் காட்டுகின்றன. இவரது காலத்திற்குப் பின்னர் இதன் வளர்ச்சி குறையத் தொடங்கியது என்பதை ஆவணங்கள் தெளிவாகக் காட்டுகின்றன. எனவே கி.பி.1777 முதல் 1855 வரை சாளுவநாயக்கன் பட்டினத்துறைமுகம் புகழ் பெற்றுத் திகழ்ந்தது என்பது வரலாறு காட்டும் உண்மையாகும்.

# சாளுவநாயக்கன் பட்டினம் : புவிப்புறவியல் நிலஅமைப்பும் சுற்றுப்புறச் சூழலும்

கடலியல், கடலோரப் புவிப் புறவியல் ஆகிய இரண்டும் சாளுவநாயக்கன் பட்டினத்தின் இயற்கை வரலாற்றை அறிய உதவுகின்றன. மீன் பிடித்தல், கடல் வணிகத் தொடர்பு ஆகியவற்றின் மரபு வழி வரலாறு என்பது கடலோரப் புவிப் புறவியல் வரலாற்றுடன் நெருங்கிய தொடர்புடையது. மீன் வளம், கடல் போக்குவரத்திற்குரிய கடலோரக் கரைகளின் இயற்கை அமைப்புக்கள், கப்பல் படகுப் போக்குவரத்திற்குரிய கடல்வழி வாய்ப்புக்களாகின்றன. இயற்கையின் வாய்ப்புக்கள் எவ்வாறு சாளுவநாயக்கன் பட்டினத்தின் மீன்பிடித் தொழில், கடல் வணிகம், கடற்கட்டுமானங்கள் போன்ற பணிகளுக்கு உதவியுள்ளன என்பதை அறிய மனோரா கோட்டை, சேதுபாவா சத்திரம், இராஜாமடம் ஆகியவற்றை உள்ளடக்கிய சாளுவநாயக்கன்பட்டினக் கடலோரப் பகுதிகள் குறித்த கருத்துக்கள் சுற்றுப்புறச் சூழல் குறித்து அறியப் பெரிதும் துணை நிற்கின்றன.

மனோரா அமைந்துள்ள கடலோரப் பகுதியின் இயற்கை மாற்றங்கள் எவ்வாறு நிகழ்ந்துள்ளன என்று அறிந்தால், தற்போதைய கடலோரப்பகுதி எத்தகைய மாற்றங்களை அடையும் என்பதைக் கணிக்கலாம்.

தினந்தோறும் ஏற்பட்டு வருகின்ற மாற்றங்களை ஒருவர் எளிதாகக் காணும் வண்ணம் கரையோரப் படிவுகள் காட்சியளிக்கின்றன. கடல் அலைகளும், நீரோட்டங்களும், பல்வேறு வகையான ஓதங்களும், தொடர்ச்சியான அலைகளின் போக்கும் வெவ்வேறு வகையான கடலோர அமைப்புக்களை ஏற்படுத்தியுள்ளன. மனோராக் கோட்டை அமைந்துள்ள சாளுவநாயக்கன் பட்டினமானது ஒரு அரைவட்ட வளைவின் மையப் பகுதி போன்றது. கோடியக்கரை முதல் தேவிப்பட்டனம் வரை உள்ள கடலோர நிலப் பகுதிகளில் பல ஆயிரமாண்டுகளாக நிகழ்ந்து வருகின்ற நில அமைப்பு மாற்றங்களைக் காணலாம். இம்மாற்றங்களை அளவிடுதலின் வாயிலாக இயற்கையான பூமியின் மீது கடல்நீர் ஏற்படுத்தும் புதிய கரையோர அமைப்பையும்

அலைகளின் வேகத்தால் ஏற்பட்ட சிதைவுகளையும் அல்லது ஒட்டுமொத்தமான சிதைவுகளையும் அறிய முடிகின்றது.

சேதுபாவா சத்திரம், மனோராக் கோட்டை, இராஜாமடம் ஆகிய பகுதிகள் உள்ளிட்ட சாளுவநாயக்கன் பட்டினத்தின் கரையோரப் பகுதிகளில் குவாட்டர்னரி காலத்திலிருந்து இன்று வரை நிகழ்ந்துள்ள புவிப் புறவியல் மாற்றங்களை அறிய முடிகின்றது. இதில் நாகப்பட்டினம் முதல் அதிராம்பட்டினம் - கோடியக்கரை - சாளுவநாயக்கன் பட்டினம் - சேதுபாவா சத்திரம் - தொண்டி - தேவிப்பட்டினம் வரையுள்ள பகுதிகள் பண்டைத் தமிழர்களின் கடல் வணிகத்திற்கும் மீன்பிடித்தலுக்கும் உரிய வளமான பகுதிகளாக இருந்துள்ளதை உணர முடிகின்றது. இப்பகுதியானது, 10° 15' வடக்குக் கிடைக்கோடு மற்றும் 79° 30' முதல் 79° 55' கிழக்குக் குத்துக்கோடு வரை 125 கி.மீ. தூரமுள்ள பகுதியையும் 9° 30' முதல் 10° 30' வடக்கு அட்சரேகை மற்றும் 78° 30' முதல் 79° 30 கிழக்குத் தீர்க்கரேகை வரையுள்ள சுமார் 850 ச.கி.மீ தூரமுள்ள கடலோரப் பகுதியையும் உள்ளடக்கியதாகும்.

சாளுவநாயக்கன் பட்டின கடலோரப் பகுதிகளின் மாற்றங்களைப் புவிவரைபடம், வான்வழி நிலப்படங்கள், செயற்கைக்கோள் வழியாகப் பெறப்பட்ட ஆய்வு வரைபடங்கள் போன்றவற்றின் துணையுடன் எளிதில் அறிய முடிகின்றது. இவ்வாறு காணப்படும் புவிப்புறவியல் வரைபடம் (Geomorphological map) சாளுவநாயக்கன் பட்டினத்தின் கடலோரச் செயற்பாட்டினை அறியத் துணை செய்கின்றது. சம உயரக் கோடுகளைக் கொண்டு (Contour) காணும் பொழுது இக்கோடுகள் சரிவாகக் கடல் நோக்கிச் செல்வதாக உள்ளது. புவிப்புறத் தோற்றம் (Topographically) அலை அலையாக மேடுபள்ளங்களுடன் காட்சியளிக்கின்றது.

உள்நாட்டுப் பகுதிகளுக்குத் தரைவழியாகவும், ஆற்று நீர் வழிகளின் வாயிலாகவும் போக்குவரத்துகள் நிகழ்ந்துள்ளன. இப்போக்குவரத்து வாய்ப்புக்கள் கடல் வணிகத் தொடர்புக்கும் பெரிதும் துணை நின்றுள்ளன. இப்பகுதியிலிருந்த ஆறுகளே இக்கடலோர நீர்வரத்து வழிகளாகவும் இருந்துள்ளன.

ஓத நீரேற்றத்தால் ஏற்படும் நீரோடைகளின் போக்கால் கடலோரத்தின் தொடர்ச்சியான புவியமைப்பை அவை அறுத்து விடுகின்றது. இச்செயலால் பல்வேறு திட்டுகளாகக் கரைப்பகுதிகள் காட்சியளிக்கின்றன. சாளுவநாயக்கன்பட்டினத்திலிருந்து

நாகப்பட்டினம் வரையுள்ள பகுதிகளின் கடற்கரைகள் 100 - 120 மீ வரை அகலமுடைய வைகளாகக் காணப்படுகின்றன. கடற்கரை நீள் முகடுகளுக்கு இடையே உள்ள நீள் முகட்டுப் பள்ளங்கள் சேற்றுப் படிவுகள் (Back swamp), தொன்மைச் சேற்றுச் சமதளங்கள் மற்றும் பண்டைய ஒத நீர்ப்பிடிப்புச் சமதளங்கள் எனப் பல்வேறு இயற்கை நிகழ்வுகளை தன்னுள் உள்ளடக்கிக் கொண்டுள்ளன. சாளுவநாயக்கன் பட்டினம், இராஜாமடம் பகுதிகளின் கடலோரப் பகுதிகளில் களிமண் கலந்தச் சேற்றுப் படிவுகள் பெரிதும் காணப்படுகின்றன. இங்கு அமைந்துள்ள காயல்களின் தனித் தன்மைகளைக் காணும் பொழுது, இக்காயல்களின் அமைவுகளே பண்டையக் கடற்கரை விளிம்பாக இருந்திருக்கக் கூடும் எனக் கருதப்படுகின்றது. முக்கியமாக இராஜாமடம் பகுதியிலுள்ள தெற்கு மற்றும் தென்கிழக்குப் பகுதிகளில், தென் கிழக்குத் திசைப் போக்கைக் கொண்டுள்ள பல்வேறு மணல்தடைகள் அமைந்துள்ளன. இம்மணல்தடைகள் 'கொக்கி' போன்ற வடிவமைப்புடன் திகழ்கின்றன. இதே போன்ற மணல்தடைகள் கோடியக்கரைப் பகுதியில் கிழக்குத் திசைப் போக்கில் பிறைக் கதுப்பு வடிவம் (Cuspate) கொண்டுள்ளதையும் குறிப்பிடுகின்றனர். ஆனால் முத்துப் பேட்டையின் தெற்குப் பகுதியிலும், சேர்தலைக் காட்டின் கிழக்குப் பகுதிகளிலும் முதிர்ச்சியில்லாத வளரும் மணல்தடைகள் காணப் படுகின்றன. இப்பகுதியின் ஒட்டு மொத்த அமைப்பு இயல்புகளைக் காணும் பொழுது முதிர்ச்சியில்லாத மணல்தடைகள் கோடியக்கரைப் பகுதிகளின் மையத்தில் இவ்வளரும் மணல்திட்டுகள் காணப் படுகின்றன. இராஜாமடம் மனோரா பகுதிகளில் வளர்ச்சியில்லாத பிறைக் கதுப்பின் முற்புற நிலப்பரப்புக் காணப்படுகின்றது. எனவே பிறைக்கதுப்பு முற்புற நிலப்பரப்புக்கள் கோடியக்கரை வரை வளரும் மணல்திட்டுகள் போன்றவை வெட்டாறு, வெள்ளாறு, உப்பனாறு, அரசலாறு, திருமலைராஜனாறு, பாமினியாறு, வெண்ணாறு, அக்னியாறு போன்ற நிலையற்ற (Ephemeral) ஆறுகளின் முகத்துவாரங்களில் காணப்படுகின்றன. சாளுவநாயக்கன்பட்டினம், சேதுபாவா சத்திரம், இராஜாமடம் ஆகிய பரப்பளவைக் கொண்ட இக்கடற்கரைப் பகுதிகளில் பிறைவடிவ (Parabolic), நீள் (Longitudinal) மற்றும் குறுக்கு (Transverse) வடிவங்களிலான மணற் குன்றுகளின் தொகுப்புக்கள் காணப்படுவதால் பண்டைய நீர்க்கால்வாய்கள் (Palaeo - Channels) இருந்திருக்கக் கூடும் எனக் கருதப்படுகின்றது.

கடல் நீர்மட்டத்தின் மாற்றங்களின் வாயிலாகக் காணும்பொழுது கடல் நிலத்தினுள் புகுந்து (Transgression) பின்னர்

அது பின்வாங்கிய (Regression) மாற்றங்களைப் புலப்படுத்துகின்றன. இத்தகைய பெரிய மாற்றங்களைக் கடலோர ஆற்றுக் குறுமணல் கலந்த நீள் முகடுகளும், மேலும் இவ்வெளியில் காணப்பெறும் ஓதநீர்ச் சமதளங்களும் இப்பகுதியில் கடல் கொண்ட நிலையை வெளிப்படுத்துகின்றன. இக்கடற்கரைப் பகுதிகளில் இந்நிகழ்வுகள் பனிஉறை, உருகு இடைக்காலம் (Interglacial) என்னும் பிந்து குவாட்டர்னரி காலத்தில் அதாவது 125 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பாக நடந்த நிகழ்வைச் சுட்டுவதாக அங்குள்ளசான்றுகள் புலப்படுத்துகின்றன. இதனடிப்படையில் காணும்பொழுது ஏறத்தாழ 6000 ஆண்டுகளுக்கு முந்திய ஹோலோசின் (Holocene)காலத்தில் நிகழ்ந்த கடல் பின்னடைவைக் காட்டுகின்றன.

பண்டைய ஓதநீர்ச் சமதளங்கள், பண்டையக் காயல்கள் மைய ஹோலோசின் காலத்தில் ஏற்பட்ட கடல் உட்புகு நிகழ்வின் உச்சநிலை எனக் கருதுகின்றனர். கடலோரத்தில் காணப்படும் பலநிலையுடைய கடற்கரை முகடுகள் ஹோலோசின் காலம் முடிவுறும் நிலையில் ஏற்பட்டுள்ள கடல் பின்னடைவைச் சுட்டுகின்றன. ஆனால், காயல்கள், உவர் சதுப்புத் திடல்கள் மற்றும் வளரும் மணல்தடைகள் தற்பொழுது நடந்து கொண்டிருக்கும் கடல் உட்புகும்தன்மையினையும் கடல் அலைகளின் தாக்கத்தினையும் நிகழ்ந்து வரும் தற்காலச் சுற்றுச் சூழலையும் வெளிப்படுத்துகின்றன. தற்பொழுது ஏற்பட்டு வரும் கடல் உட்புகு நிலை, ஏறத்தாழ கி.பி. 200 - 225 ஆம் ஆண்டுகளில் ஏற்படத் தொடங்கியதன் தொடர்ச்சியே ஆகும். இத்தகைய கடல் நீர் மட்ட மாற்றங்களால் பண்டைய வேதாரண்யம், அதிராம்பட்டினம் துறைமுகங்களின் ஒருசில பகுதிகள் மூழ்கிய பகுதிகளில் இருந்திருக்கக் கூடும். பல கடலோரப் பகுதிகள் இக்காலக்கட்டத்தில் மூழ்கியிருக்கக் கூடும் எனக் கருகின்றனர். எனவே, கோடியக் கரையிலிருந்து சேதுபாவா சத்திரம் வரையுள்ள பகுதிகளில் நிகழ்ந்துள்ள இவ்வகையான மாற்றங்கள் கடற்கரைப் பகுதிகள் புதிய தோற்ற வாய்ப்புக்களுடன் அமைந்திருப்பது தெளிவாகின்றது.

சாளுவநாயக்கன்பட்டினம் கடற்கரை நில அமைப்புப் பகுதியினைக் காணும்பொழுது : கடற்கரை (beach), கடற்கரை நீள்முகடுகள் (beach ridges), நீள்முகட்டுப் பள்ளங்கள் (swale), ஓதச்சமதளங்கள் (tidal flats), சேற்றுச் சமதளங்கள் (mudflats) பண்டைய ஓதச் சமதளங்கள் (Palaeo - tidal flats), பண்டையக் காயல்கள் (palaeo - lagoons), மணற்குன்றுகள் (sand dunes), கடலோர ஆற்றுக் குறுமணல் கலந்த நீள் முகடுகள் (chenier), வளரும் மணல்

தடைகள் (spit), உப்பளங்கள் (salt pan), வண்டல் படிவுச் சமவெளிகள் (alluvial plains), உவர் சதுப்புத் திடல்கள் (salt marshes) மற்றும் காயல்கள் (lagoons) என்னும் பல்வேறு வகையான நில அமைப்பு முறைகள் காணப்படுகின்றன. இவற்றில் இராஜாமடம் பகுதியில் சேற்றுச் சமவெளிகள் உருவாகி வருகின்றன.

மிகப்பெரிய மாற்றத்திற்குரிய இடமாக மணல்மேல்குடி அமைகின்றது. ஆறுகளின் போக்கில் ஏற்பட்ட மாற்றங்களுக்கு இக்கடலோர மணல் திட்டுகளின் தோற்றமே காரணமாகவுள்ளன. மணற் பாங்கான கடற்கரைப் பகுதியைக் கொண்ட கோடியக்கரை, சேதுபாவா சத்திரப் பகுதிகளில் ஓதங்களினாலும் ஓதநிலப்பிளவுகளாலும் கடற்கரைப் பகுதிகள் ஒரு தொடர்ச்சியான சம அளவுடைய அமைப்பில் இல்லை. ஆனால் சாளுவ நாயக்கன்பட்டினத்தில் குறிப்பாக மனோரா முதல் சேதுபாவா சத்திரம் வரையுள்ள மணற்பாங்கான கடற்கரைப் பகுதிகள் சற்று அகலமாகவே அமைந்துள்ளன. இவ்வமைப்பினைப் பயன்படுத்திக் கொண்டு இப்பகுதியில் ஒரு சிறந்த மணற் கடற்கரை சுற்றுலாப் பகுதியாக உருவாக்கலாம். இப்பகுதியில் காணப்படும் சேற்றுப் பகுதிகளையும் அகற்றி விட வாய்ப்புக்கள் உண்டு. எனவே எதிர்வரும் காலங்களில் இப்பகுதியை ஒரு தலைசிறந்த தேசியக் கடற்கரைச் சுற்றுலாத் தலமாக மாற்றியமைக்கலாம். ஏனெனில் மணல்திட்டுகள் தேவிபட்டினம் முதல் மணல்மேல்குடி, காட்டு மாவாடி, மனோராக்கோட்டை பகுதி வரையுள்ளது. ஆறுகளின் கழிமுகப் பகுதிகளில் ஆற்று நீர் வேகம் மற்றும் கடல் அலைகளின் வேகம் ஆகிய இரண்டிற்குமிடையே ஏற்படும் மோதல் நிகழ்வுகளால் களிமண் ஏற்படும் நிலை ஏற்படுகின்றது. இத்தகைய மாற்றங்களை ஆற்று நீர் கடலில் கலக்கும் இடங்களில் காண வாய்ப்பாகின்றது.

கடற்கரை (beach) என்பது கடலோரப் பகுதிகளில் தற்காலிகமாகவோ அல்லது குறுங்காலத்திற்குரிய படிவுகளாகவோ ஏற்படுகின்ற அமைப்பாகும். கடற்கரைப் பொருட்களின் தன்மைக்கு ஏற்பக் கடற்கரையின் நிலவமைப்பினை அறியமுடிகின்றது. கடற்கரை மணலின் அமைப்பானது கடல் அலைகளாலும், வீசும் கடற் காற்றாலும் கடல் அலையின் நீர்ப்போக்கும், இதனால் தள்ளப்பட்டுவரும் பொருட்களின் தன்மைகளுக்கு ஏற்பவும் கடற்கரைமணல் அமைகின்றது. மனோராக் கடற்கரைப் பகுதிகளில் உயர்ந்தும், தாழ்ந்தும் எழுகின்ற கடல் அலைகளுடைய பகுதியாக மனோராக் கடற்கரைப் பகுதி திகழ்கின்றது. கடற்கரை நோக்கி நேராகவரும் கடல் அலைகள் சுமார் 20-30 மீ அளவிலும் மனோராப் பகுதிகளிலும், சற்று அகன்ற அலைகளாக அம்மணிசத்திரம்,

கட்டுமாவடிப் பகுதிகளிலும் எழுகின்றன. நீள் முகடுகளின் (Beach Ridges) அமைப்புக்களையும் மனோராப் பகுதியில் காணமுடிகின்றன. இவை கடல் மணல்திட்டுகளின் போக்கைத் தொடர்ந்தே வருகின்றன. நீள் முகடுகளின் தோற்றமானது சிறிதாகவும் பெரிதாகவும் தொன்மைக் காலந்தொட்டுத் தொடர்ந்து இக்கடற்கரைப் பகுதியில் அமைந்து வருகின்ற நிலையைக் கொண்டுள்ளது. இவை இக்கடற்கரையில் ஏற்படும் அலைகளின் இருநிலைச் செயல்களாலும் கடற்காற்றாலும் கடற்கரையின் மீது சில இயற்கையான சுற்றுப்புறச் சூழலின் நிகழ்வுகளைப் படியச் செய்து வருகின்றன. சாளுவநாயக்கன் பட்டினத்தில் அமைந்துள்ள நீள் முகடுகள், சற்றுக் கடற்கரையைக் கடந்து இருப்பதைக் காண முடிகின்றது. நீள்முகடுகளின் உயரம் கடல் அலைகளின் உயரத்திற்கு ஏற்ப அமைகின்றது. ஆனால் சில மாற்றங்கள் காற்றின் வீசு திசைக்கேற்பவும், இடத்தன்மைக்கு ஏற்பவும் மாறுபடுகின்றன. இருப்பினும் ஒரு நேர்தோற்றத்துடன் இந்த நீள்முகடுகள் காட்சியளிக்கின்றன. இந்த நீள் முகடுகளின் வேறுபாடுகள், இயற்கையான இடம், அலைகளின் தன்மை, பிற சுற்றுப்புறத்தன்மைகளுக்கு ஏற்ப அமைகின்றது. இத்தகைய போக்கினை வையை மற்றும் காவிரி ஆற்றுப் படுகைகளிடத்துச் சிறப்பாகக் காணலாம். மணல்மேல்குடியிலிருந்து இப்பகுதிவரை உயரமான தொடர்ச்சியான நீள் முகடுகளைக் கொண்டுள்ளன. இவ்வாறு ஏற்பட்டிருந்த நீள்முகட்டுப் பகுதிகளில் பல்வேறு கடற்கரைக் குடியிருப்புகள், கிராமங்கள் ஏற்பட்டுள்ளன. இவற்றில் குறிப்பாகக் கோட்டைப்பட்டினம், திருப்பாலக்குடி, தொண்டி, மீமிசல், மணல்மேல்குடி, கட்டுமாவடி, கோட்டைப்பட்டினம், சேதுபாவாசத்திரம் போன்ற இடங்களைக் கூறலாம்.

இயற்கையின் வளத்தோடும் வனப்போடும் அருமையான சுற்றுப்புறச்சூழலில் மனோரா கடற்கரைப் பகுதி அமைந்துள்ளது. இக்கடற்கரைப் பகுதியினை, அறிவியல் வழிப்பட்ட அணுகுமுறையில் மேம்படுத்தி, மேலும் மிளிரச்செய்யும் கடமை நம் அனைவருக்கும் உண்டு. படகுப் போக்குவரத்து, அருங்காட்சியகம் முதலிய அமையத்தக்க வாய்ப்புகளுள்ள இக்கடற்கரைப் பகுதி, உள்நாட்டினரையும் அயல்நாட்டினரையும் ஈர்க்கும் ஒப்பற்ற சுற்றுலாப் பகுதியாகும் என்பதில் ஐயமில்லை.

# GEOMORPHOLOGICAL MAP



# தஞ்சாவூர் சரசுவதி மகால் ஆவணங்கள்



# சரசுவதி மகால் ஆவணங்கள்

**ஆவணம் எண் - 1** **ச. ம. எண் - 1**

லண்டன் ஸ்ரீ வையாபுரி மேஸ்திரியார் அவர்களுக்குமேஸ்தர்

முத்திரை ஜேம்ஸ் றோஸ் துரையவர்கள் சலாம்.

இப்பவு நாமும் அப்பாவு பிள்ளையும் சரவேந்திர பட்ட ........ஷ பட்டணத்து காரிஸதர் மரிலாதி செயிது நமக்காக வேண்டிய சன்மானங்கள் சேகரஞ் செயிது கொடுத்து, கப்பல் முதலான சாமான்களை காண்பித்து சாக்கிரதை செயிதார். ஷ கப்பல் ரொம்ப பிலாமானது, லெக்ஷமண முள்ளதுமாயிருக்கிறதுமல்லாமல் அதில் யதிகமாய் ரிப்பேர் செய்யவேண்டியதில்லை. சில விடங்களில் செம்பு புத்தான் யோயிருக்கிறது. அதுலுமல்லாமல் கலம்மத்து பண்ணி தார் பூசிக்கொள்ளுகிறதுக்கு உத்தேசம் ரூ. 100 -ம், கோளிவெட்டி கடலில் தள்ளுகிறதுக்கு ரூ. 100- ம் யெறனூறு ரூபாய் சிலவு செய்தால் கப்பல் தீவாந்திரங்களுக்குப் போகலாம். யானால் கப்பலைப் பார்த்ததின் போரில் நமக்கு சந்தோஷமாயிருக்கிறது. ஷ கப்பலுக்கு கப்பிதான் முதலானவர்களுடைய சிலவுகளை அரண்மனையாரவர்கள் குடுத்துக்கொண்டால் வருஷம் 1க்கு ரூ. 18,000 கொடுக்கிறோம். அல்லது ஷை சிலவுகள் நாமே செய்துகொண்டால் வருஷம் 1க்கு ரூ. 6,000 கொடுத்து வருகிறோம். ஆகையால் நமக்கு ஸ்ரீ ஸ்ரீ ஐயின்சு மகாராசா சாயெபு யவர்களைக் காணவேணுமென்கிற மனுதுமாயிருப்பதால் அந்தப் படிக்கி பேட்டி செய்து வைப்பீரென்கிறதாக நினைக்கிறோம். நம்முடைய கப்பல் யிருவது நேரத்தில் நாகப்பட்டணத்துக்கு வந்துசேரும். யிந்தக் காரியத்தில் நீ ரெடுத்துக் கொண்ட பிரயாசத்துக்காக ரொம்ப நன்றியறிந்தவறாக இருக்கிறோம். ஸ்ரீ ஸ்ரீ அயின்சு மகாராஜா சாயெபு யவர்களுக்கு நம்முடைய பேரால் ரொம்பவும் சலாஞ் சொல்லவும். மைத்த காரியங்களெல்லாம் அப்பாவு பிள்ளை யிடத்தில் சொல்லிய்ிருக்கிறோம். அவர் முகதாவில்ப் பேச சகல காறியமும் தெரியலாம். ஆகையால் நாம் யவடத்துக்கு சீக்கிறத்தில் வ....ற.......ண்டு கொள்ளும்படி செய்யவேண்டியது. வேணும் சலாம்

1838 - வரு

ஜெனவரி - மீ 25 (Sd) James Rop.

(ஆவணத்தின் பின்புறமுள்ள முகவரி)

இவை தஞ்சாவூரில் வையாபுரி மேஸ்திரியாறவர்களுக்கு கொடுப்பது.

சிந்தாயாத்திரை 1838 சூலைய் 26
க்கி விளம்பி ஆடி 13 உ தஞ்ச நகரம் கோட்டைக்குள் இருக்கும் சரபேந்திரராசப்பட்டணம் மத்தியஸ்தம் கனகசபையா பிள்ளையவர்களுக்கு நாகப்பட்டணத்தில் யிருக்கும் மேஸ்த்தர் சேமிஸ்சு றாஸ்சு துரை யெழுதிக்குடுத்த கப்பல் பத்தா கூலி ஒடம்படிக்கை யென்னவென்றால்,

தங்களதாகிய பிறகதீசுபர் பரிசாத்து யென்ங்கிரயிரண்டு பாயிமற கப்பலை நான் பத்தாகூலியாக ஒப்புக்கொண்ட விபரமாவது ஷை கப்பல் 46 கரிசு யேத்துமதி செய்யப்பட்ட உளுவும், அதின் ஓடும்போற தளவாட சாமானும் வருஷம் 1க்கு நான் பத்தா கலி தீத்துக்கொண்டது ரூ. 6000 க்கு ஷை கப்பல் பழுது பார்க்கறதர்க்காக வருஷம் 1க்கு ரூ. 400 தள்ளி மைத்த ரூ. 5600 க்கு நான் ஒப்புக்கொண்டு ஷை கப்பலை சாலமோன்று அயிலன் (சாலமோன்தீவு) யென்கிற தீவுக்கும் மைத்தும் தீவு தீவாந்திர முதலான துறை முகங்களுக்கும் பாயி விரித்து ஓடிதிரிந்து சிந்தாயாத்திரையாயிந்த கரையாகிய சென்னபட்டணம் யிந்த துறைமுகங்கள் ஓடிவந்தபின் அந்தந்த வருஷம் ஆணி த்திக்கி சூன் 17 யில் மேலெழுதிய பத்தாகூலி துகையை நான் செலுத்தி வருகிறது. யிந்த பிறகாறம் ஏழு வருஷத்துக்கு ஷை கப்பலை நான் பத்தா கூலியாக தங்களிடத்தில் ஒப்புக்கொண்டிருப்பதால் அந்தந்த வருஷத்தில் மேலெழுதியபடி பத்தாகூலிய துகையை செலுத்தி வருகிறது. ஷை கப்பலுக்கு 1200 ரூபாய்க்கி மேல் அதிய பழுதுகள் பழுதுபாத்து சிலவு செய்தால் அந்தந்தயிடத்தில் யிருக்கப்பட வற்த்தகாளி கையெழுத்தாவது உத்தியோகஸ் த்தாள் கையெழுத்தாவது கணக்கில் வய்த்து, அதில் என் கையெழுத்தும் வய்த்து நான் குடுக்கற கணக்கு பிறகாறம் தங்கள் பத்தாகூலியில் யெனக்கு தள்ளி குடுக்கறது. ஷை கப்பலுக்கு உ பாசு சென்னபட்டண கெவுறண்மேண்டாறிடத்தில் பெத்து வருகுற பாசை நான் உருவில் வய்த்துக்கொண்டு அதர்க்கு நகல் உங்களுக்கு நான் குடுக்கறது. ஷை பாசு சிலவு நானே யேற்த்துக்கொள்ளுகுறது. ஷை வருகுற சாமானில் தங்களுக்கு தேவையாயிருந்தால் அதுகள் உங்களுக்கு குடுத்து அதின் கிரயம் பத்தாகூலியில் தள்ளிக்கொண்டு அதியம் பிறிதி நான் தங்களிடத்தில் பெத்துக்கொள்ளுகுறது. ஷை கப்பலை நான் பத்தா கூலிக்கி ஒப்புக்கொண்டு யென்பிறமாயி ஓடிதிரியரதில் யாசீகம், தெய்வீகம் நேரிட்டால் அது தங்கள் பிறமேயல்லாமல் யெனக்கு சம்மந்தம்யில்லை. மேலெழுதிய கெடு

யேழு வருஷம் சென்ற உடனே ஓடும் போற தளவாட சாமானுடனே உரு ஒப்பிப்பே னாகவும். இந்தப்படிக்கி சம்மதிச்சு கனகசபையா பிள்ளையவர்களுக்கு மேஸ்த்தர் சேமிஸ்சு றாஸ்சு துறை கப்பல் பத்தாகூலி ஒடம்படிக்கை யெழுதிகொடுத்தேன்.

(ஒப்பம்) James Rop.

யிதற்காறியம் சாஷ்இ

நாகபட்டனத்தில் யிருக்கும் ஆடாத்து செயிலாமு சாயபு மரைக்கார் அறிவேன்.
நாகபட்டனத்திலிருக்கும் முத்தையஞ் செட்டியார் அறிவேன்.
நாகப்பட்டணம் நாராயண பிள்ளை அறிவேன்.
திருவேங்கிடம் நெட்டெழுத்து

(இவ்வாவணத்தின் பின்பக்கம்)

நிம்பர் - 1

1838 சுலாய்- 26 உ நாகப்பட்டணம் அசூற்கச்சேரியில் நாகப்பட்டணத்திலிருக்கும் மெஸ்த்தற் ஜெமிசு றாசு துரையவர்கள் தஞ்சனகறம் கொட்டைக்குள்ளிருக்கும் சறவேந்திற றாசபட்டணம் மத்திஸ்தம் கனக சபையாபிள்ளை யவற்களுடைய பிரதிசுபற பிரசாதென்ங்கிற கப்பலை வருஷம் 1க்கு ரூ. 5600 வீதம் பத்தாக்கூலிக்கி யெழுவருஷத்துக்கு ஒப்புக் கொண்டதற்காக ஒடம்படிக்கை யெழுதிக்குடுக்க வேண்டியதுக்காக ஷை மெஸ்த்தற் செமிசு றாஜ துறையவற்கள் காரியம் ..................வெங்கிட்டறாவு வசம் விற்க்கப்பட்டது.

ஒப்பம் குலாம் தஸ்த்தகீர்

தா..............ஷாம்பு

## ஆவணம் எண் - 3

துரையவர்கள் சமூகத்துக்கு சேதுபாவாசத்திரம் பங்களா நேமணக்கு சேவுகன் கோவிந்தப்ப நாயக்கன்மிகுந்த வணக்கத் துடனே சலாம் செய்து யெழுதிக் கொண்டது. யென்னமென்றால்

யெனக்கு சமூகத்தில் வுத்திரவு குடுத்தபிரகாரம் நான் புத்திரவு பெத்துக் கொண்டு திருச்சிதம்பலத்தில் வறவேண்டிய பணத்துக்காக சாளவ (நாய்) க்கன் பட்டணம் வுமறசாலிடத்தில் காயிதம்ங் கொண்டுவந்து குடுத்து வுமறசாயபும், சாமசாமி, நான் யிந்த மூணுபேருமாய்யி பாப்பானிடத்தில் காயிதம் குடுத்து பணம் கேட்டதற்கு ஷை பாப்பான் சொல்லுகிரது குடுத்துயிருக்கப்பட்ட (தா) னியங்களுக்கு தானிய விவரங்கண்டு யின்ன யின்ன

விலையென்று விபறமாய் கணக்கும், கோளி, யாடு பணம் ரூ. யிதுவெல்லாங்கண்டு விபறமாய் கணக்கு வந்தால், தன் கணக்கும் ஒத்துப்பார்த்துக்கொண்டு, பாக்கி பணம் கையில் குடுத்துவிடு குறேனென்று சொல்லுகிறான். ஆகையால் அவனை பணம் கேழ்க்கப்படவில்லை. அதற்காக ஆவடை வசமாயி விபறமாயி கணக்கு வந்தால் கண்டித்து வாங்கிப்போடுகிறேன்.

கார் பாரியிடத்தில் நானும் வுமற்சாயபு ரெண்டுபேரும் போய் கப்பல் தண்ணி கொண்டு போயிநிற்குதே யென்று கேட்ட காரியத்துக்கு நீ கப்பலண்டை வரக்கூடாது என்று சொல்லுகுறார்.

அரண்மனையில் போடப்பட்ட சாமானுக்கு நீ பாத்தியப்படுகுறோமென்று சொன்னால் நீ அந்த யிடத்துக்குப் போகலாமென்று சொல்லுகிறார். கொல்லு பட்டரை போட்டிருந்த கொட்டகை விளுந்துபோயிருப்பதினாலே அந்த கொட்டகையைப் பிரித்துக் கட்டுகுறோமென்று சொன்னயிடத்தில் நீ கட்ட வேண்டியதில்லை, நான் ஆளுவிட்டுக் கட்டிக்கொள்ளுகிரே னென்று சொல்லுகுறார். கப்பலும் தண்ணிகொண்டு போயிருக்குது. அந்தத் தண்ணியை யிரைக்குறேமெண்டு சொன்னதற்கு நீ யெரைக்கக்கூடாதென்றும் வுமற்சாயபுக்கு வுத்தரவு பண்ணியிருக் குறார். யிதையல்லாமல் கப்பல் சாமான் நார்காலி-க, மேசை-க, ஒத்தை பூட்டு-க. யிந்த சாமானை தோட்டக்காரர் பரிமணம் வசம் குடுத்தவிடச்சொல்லி சுப்பிரமணிய பிள்ளை காயிதம் யெழுதியிருக்கிறார். நான் துரையவர்களுடைய வுத்திரவு வந்தால் குடுப்பேநென்று பறிமணத்துக்கு சொல்லியிருக்குரென்-சமூகத்தில் வுத்திரவானபடி நான் ஒருவருக்கு குடுக்கவில்லை. யிப்பவும் சமூகத்தில் வுத்திரவு யெப்படி வருகுதொ அப்படி நடந்து கொள்ளுகுரென்-யிப்பவும் வுத்திரவுப்படி ஆவடை வசமாயி காயிதம் யெழுதி யனுப்பிவைத்திருக்குரென். யெப்படி வுத்திரவு வருகுதொ அப்படி நடந்து கொள்ளுகிரென். யிப்பவுமெனக்கும் ஆவடைக்கும் சாப்பாட்டுக்கில்லாத்தினாலே ரெண்டு மாஸத்தை சம்பளம் ஆவடைவசமா யனுப்பிவிக்கும்படியாயி சமூகத்தில் வுத்திரவாக வேண்டியது. வேணும்-சலாம்.

1839 வரு
நவம்பற்- 11

(ஒப்பம்) --இந்த கீரல் பங்களா நேமணக்கு
கோவிந்தப்ப நாயக்கன்.

(True Copy)
(இது உண்மையான கையெழுத்து)

ஆவணம் எண் - 4 ச. ம. எண் - 10

Tanjore 2nd March 1842.

To

Ry. Bavajee Ramajee Pandit
Sirkell of His Highhess the Rajah of Tanjore.

Sir.

1842 ஜெனவரி மீ 4 போடப்பட்ட தங்களுடைய மறாஷீட்டக் கடுதாசியை வரப்பத்திக்கொண்டோம். அதனுடைய அவையடக்கத்தில் நம்மிடமாக யுக்த்தமான தஸ்த்தாவேசு களில்லாமலும் சாளுவநாய்க்கன் பட்டணத்திலிருக்கப்பட்ட அனுபோகந் தெரிந்தவர்களைக்கொண்டு நாம் ருசு கொடுக்காமலும் வீணான யெழுதின பத்திரத்தினுடையவும், அப்பாவுபிள்ளை நமக்கெழுதின பத்திரத்தனுடையவும் நகலை தாங்கள் பார்வையிட்ட போது வியாட்சியப்படுகிற துகைக்கி தகுமான ஆதரவாகயிருக்க வில்லையென்றும் செப்டம்பர் யில் நாமெழுதிய காகிதத்தில் நாம் பகுதுபார்க்கவேண்டியதற்காக ஷை கப்பலுக்கு ரூ. 3800 மதிப்புக்கண்டு யெழுதியிருக்கிறோமென்றும், நடந்திருக்கிற வேலை தேதி வாரியாய் அவ்விடத்திலிருக்கப்பட்ட காலியஸ்த்தாளுடைய ருசு வார்த்தையின் பேரில் செய்யவில்லையென்றும் கடசியில் நாமந்தயிடத்தை விட்டுப்போகும்போது ஷை சிலவான துகைக்கி ஜாப்த்தா யெழுதி அவாளிடத்தில் கொடுக்கவில்லையென்றும், நாம் திருவாதியில் பேட்டிக்காக நாம் வந்திருக்கும்போது தேவாஜிறாயர் மூலியமாயி ஜாமீன் கொடுக்கவேணுமென்று கேட்டதற்கு னாம் பின்னுக்கு வாங்கிப்போய்விட்ட நிமித்தியம் அனுமானப்பட்டுக் கபுலாத்துக்கொடாமல் அட்டிப்பட்டுப் போச்சுதென்றும் மாஜி ரெசிடென்று காப்டன் டகுலசு துரையவர்களுக்கும் அரமனையாரவர்களுக்கும் யிது சங்கதியைக்குறித்து நடந்திருக்கிற காகித பத்திரங்களின் ரிக்கார்டுகளை பரிசோதனை பண்ணிப்பார்த்த விடத்தில் நமக்கு சம்பவித்திருக்கிற நஷ்டத்தைக் கொடுத்துவிடு கிறதற்கு அரண்மனையார் ஒப்புக்கொண்டதாக யாதொரு தஸ்த்தாவேசுகளும் காணப்படவில்லை யென்றும்-பின்னும் சாளுவ னாய்க்கன் பட்டணத்தில் ஒரு கொட்டடியில் ரூ. 3000 பெறுமான கெடியார முதலான சாமான்களை வைத்துப் பூட்டி முத்திரை வைத்திருந்ததை முத்திரை உடைத்து சாமான்களை யெடுத்துப் போட்டதாக நாமிப்போ புதுசாகச் சொல்லுகிறோ மென்றும் ஷை

சாமான்கள் இன்னது இன்னது யென்றும் இன்னானுடையதென்றும் இன்னா னுடைய ருசுவார்த்தியின் பேறில் முத்திரைபோட்டு கொட்டடியை யின்னான் வசமாக ஒப்புவித்திருக்குதென்று யெழுதப்படவில்லையென்றும்ஷை சங்கதிகளைக் குறித்து சாளுவநாயக்கன் பட்டணத்து காரியஸ்த்தாளை தாங்கள் வரவழைத்து விசாரண செய்தபோது நமக்கு கொட்டடி கொடித்ததில்லை யென்கிறதாகவும் அதில் நம்முடைய சாமான்கள் வைத்ததில்லை என்கறிதாகவும் நம்முடைய சாமான்களெல்லாம் ஒரு கொட்டாகையில் நாம் வைத்துக்கொண்டிருந்த தாகவும், நாம் போரபோது நம்முடைய சாமானங்களோடே அரமனை சாமானங்களில் சிலதை நாம் யெடுத்துக்கொண்டு போயிவிட்ட தாகவும் ஷை யார்கள் சொல்லுகுறார்க ளென்றும் இது தவிர ஷை கப்பலில் பேத்து யெடுத்திருக்குர தகடு முதலானதுகளின் நஷ்டம் நம்முடைய பேரில் வரவேண்டியதிருக்குரதாக முன்னமே நமக்கு தெரியப்படுத்தியிருக்குதென்றும், பின்னும் சரியான துகைப்படிக்கி நாம் கருதி செயிதிருக்குர தளவாடங்களை இப்பவாகிலும் அரமனை மனுஷாளிடத்தில் ஒப்பிவித்தால் அவ்விதம் கருதி செயிது கொள்வார்களென்றும் மற்ற கூலி துகையின் நிலவரத்தை நாம் தெரியப்படுத்தினால் ஷை காரியஸ்தாளை ருசு கேட்டுக்கொண்டு ருசுவான துகையில் செப்புத்தகடுகள் முதலானதுகளுக்கு நம்முடைய பேரில் வரவேண்டியதிருக்குர துகைபோக அதிகம் பிருதியிருக்கு ரதை கொடுத்து விடுகுறோமென்றும் தாங்கள் யெழுதுகுறீர்கள்.

க-வது யுக்த்தமான தஸ்த்தாவேசுகளின் மூலியமாகவே அரமனையாரிடத்தில் நம்முடைய கவுண்டு கறென்றில் யெழுதப்பட்டிருக்குர துகை நமக்கு வர வேணுமென்று கேளிக்கு றோமே தவிர வேறில்லை. நம்மிடத்தில் கப்பலை ஒப்பிவித்த முன்னுக்கு அதில் பழுது பார்க்கும் அன்றாடக சிலவுகளை அரமனை மனுஷாள் ருசுவாரத்தியின் பேறில் செய்ய வேணுமென்றும், அவாளிடத்தில் கணக்குக் கொடுக்கவேணு மென்றும் நமக்கு சொல்லவுமில்லை. தஸ்த்தாவேசுகளின் மூலியமாக நமக்கு தெரியப் படுத்தினதுமில்லை. அப்படியிருக்கும்போது யிப்போ ஒருவருடைய ருசுகூார்த்தி னாம் செயிது வைக்கவேணுமென்கிறது. அவசரமில்லை யென்றும் நாம் கப்பல் வர்த்தகாளுடைய வளகாப்பிறகாறம் செயிதிருக்குறோ மென்றும் தாங்கள் தெறிந்துகொள்ளலாம்.

உ-வது, வையாபுரி மேஷீத்திரி அப்பாவுபிள்ளைக்கி யெழுதிய தஸ்த்தாவேசு நகலும், அப்பாவுபிள்ளை நமக்கெழுதிய தஸ்த்தாவேசு நகலும் தங்களுடைய பார்வைக்கி அனுப்பிவித்து ஷை கப்பலை

பழுதுபார்க்குறதற்காக னாம் பிரவேசித்த முகாந்தி ரத்தை மாத்திரம் தாங்கள் தெரிந்துகொள்ள வேண்டியதறகாக னாம் அனுப்பிவித்தோமே தவிற ஷை துகையினுடைய விபறத்துக்காக அனுப்பிவித்த தல்ல.

3-வது 38 வரு செப்டம்பர் மீ 16 உ நாமெழுதிய காகிதத்தில் கப்பல் பழுதுபார்க்குறதற்கு ரூ. 3800 மதிப்புப்போட்டு அனுப்பிவித்த காறியஞ்சறிதான். ஷை கப்பலை ஒப்புக்கொண்ட முன்னுக்கு கப்பல் கரையிலிருக்கும் போது ரிப்பேர் பார்த்து கோளி வெட்டி தண்ணியில் விட்டபின்பு கம்மத்து காண்டதினால் மறுபடியுங்கரை யிலேத்தி ஒருயிடத்தில் பிறித்துப்பார்த்து தண்ணீரில் நிண்ண வரைக்கும் மடித்துப்போயிருக்குமென்குறதாயி உத்தேசமாக மதிப்புப் போட்டு அனுப்பவித்தோம். பிற்பாடு கப்பலை கட்டிப்பிறித்து அடி பங்குகளுக்கு பதில்க்கொண்டுபோயி செலுத்தி ஆணிகளை வைத்து அரையும்போது மேல் பங்குகளும் உள்ளே மடிந்திருந்து துண்டு துண்டாயி விழுந்து போச்சுது அதுகளை தங்களுடைய கண்ணினாலே பார்த்திருந்தால் மிகுந்த விசனப்பட்டிருப்பீர்கள். அப்படிக்கி விழுந்து போனதினால் அதிக துகை சிலவளிக்க வேண்டியதாக நேறிட்டுது. அப்படி முழுவதும் வேலை முடியிறதற்கு முன்னமே கவுலாத்து குடுக்ககூடாதென்றும் கப்பலை விட்டுவிட்டால் அந்த விஷையத்தில் நமக்கு நேரிட்ட சிலவு துகை முழுதிலும் கொடுத்துவிடுகுளோமென்றும் அரமனையார் சொல்லுகிறதாக காப்டென் டகுலசு துரையவர்கள் முகமுகமாயி சொன்ன நிமித்தியம் முழுவதும் வேலை நிறைவேற்றப் படாமல் நிறுத்தப்பட்டுப் போயிவிட்டுது.

4-வது. நாம் பேட்டிக்காக நிதிவையாத்துக்கு வந்திருந்தபோது தேவாஜிறாயர் மூலியமாக ஜாமீன் கொடுக்கவேணுமென்று கேட்ட காறியஞ் சறிதான். இந்த வார்த்தை யிதற்குமுன் நடந்திருக்குற உடன்பிடிக்கைகளில் அடங்கியிறாததும் கப்பல் வர்த்தகாளுடைய வளாகத்திலில்லாததும் நூதன வார்த்தையாயுமிருப்பதினாலே நாம் ஜாமீன் ஒருபோதுங் கொடுக்கக்கூடாதென்று சொல்லிப்போட்டது மல்லாமல் ஸ்ரீ மகாறாஜா சாயேப் அவர்கள் பேட்டியான பின்பு வையாபுரி மேஸ்த்திரியிடத்தில் தீர்மானமான உத்திரவு யென்னவென்று கேட்டதற்கு ஜாமீன் கொடுக்கவேண்டியதில்லை யென்றும் ஷை ரூ. 3800 யும் கவுலாத்தும் 20 னூளைக்குள்ளாக நமக்கு கொடுக்கும்படி ஸ்ரீ மகாறாஜா சாகேப் அவர்களுடைய உத்திரவாகயிருக்குதென்றும் வேலை தவக்கமில்லாமல் நடப்பிவிய் யுங்களென்றும் ஷையார் சொன்னதின்பேரில் னாம் ஷை வேலை

முதலானதுகளை நடப்பிவித்து வந்திருக்க நாம் ஜாமீன் கொடுக்க பின்வாங்கின நிமித்தியம் கவுலாத்துக் கொடுக்க தவக்கப்பட்டுப் போச்சுதென்று சொல்லுவது சரியான முகாந்திரமல்லவென்று தங்களுக்கே தெறியவரலாம்.

5-வது மாசி ரிசிடென்று காப்ட்டென் டகுலசு துரையவர் களுக்கும் அரமனையாரவர்களுக்கும் இது சங்கதியைப்பத்தி நடந்திருக்குற காகித பத்திரங்களில் னாம் கப்பலை விட்டுவிடு கிறதற்கும் நமக்கு நேரிட்டிருக்குற நஷ்டத்தை அரமனையார் கொடுத்து விடுகுறோமென்று ஒப்புக்கொண்டி ருக்குறதற்கும் ரிக்கார்டில் யாதொரு ஆதரவுகளும் காணப்பட வில்லையென்பது மெத்த ஆட்சறியமாக யிருக்குது. அரமனை யாருக்கும் ரிசிடென்றுக்கும் அந்தப்படிக்கி காகிதப் பத்திரங்கள் நடந்திருக் காவிட்டால் நமக்கு ரிசிடென்று முகதரவில் சொல்ல வேண்டியது மில்லை. அதைக்குறித்து இதிலடக்கமாக வருகிற நகலின் காகிதம் நமக்கவர் யெழுதவேண்டியதுமில்லை. மிகுந்த பிறையாசைப்பட்டு வேலை நடப்பலித்து வந்த கப்பலை நாம்ந் தானே விட்டு விட வேண்டியதுமில்லை. அதினால் நேரிட்ட சிலவு துகைக்கி கவுண்டு கறென்று னாம் அனுப்பவிக்க வேண்டியதுமில் லை. நாம் வையாபுரி மேஷ்த்திரி மூலமாயி கவுலாத்துக்காக அனேகம் னாள் கார்த்திருந்து போட்டு காப்ட்டென் லாகாராட்டு துரைக்கி யெழுதினதிலும் பிரத்தியுத்தாரம் வறாத நிமித்தியம் காப்ட்டென் டகுலசு துரையிடத்தில் னாம் முகதாவில் வந்திருந்த போது கபுலாத்து வாங்கி கொடுக்கவேணுமென்று கேட்டோமே தவிர கப்பலை விட்டுவிடுகுரதற்காக நாம் வந்து சொல்லிக்கொள்ளவரவில்லை.

6-வது. வையாபுரி மேஷ்த்திரி நமக்கெழுதிய காகிதப்பிரகாரம் முத்திரை காகிதத்தில் நாம் உடன்படிக்கை செயிது கொடுத்துப்போட்டு சாளுவ னாயக்கன் பட்டணத்துக்கு கப்பல் முதலான சாமான்களை நாம் ஒப்புக்கொள்ள வந்த முன்னுக்கு அவடத்திலிருந்து மகடோல் ராமசாமி சுபையதார் அப்பாவுப் பிள்ளையை வைத்துக் கொண்டு ஷை கப்பல் முதலான சாமான்களை ஒப்புவித்த போது கோட்டைக்குள் ஒரு கொட்டடி ஒளித்து நமக்குக் கொடுத்தார். அதில் ஷை கப்பல் சாமான்களும் இதிலடக்கஞ்செயிது வருகிற ஜாப்த்தாவில்கண்ட நம்முடைய சொந்த சாமான் வகையறாக்களும் வைத்து பூட்டிக்கொண்டு ஷை கொட்டடி நம்முடைய வசமாகவேயிருக்கையில் நமக்குத் திரேக அசவிக்கியமான நிமித்தியம் ஷை கொட்டடி முதலான சாமான்களை நம்முடைய காரியஸ்த்தாள் வசமாயி ஒப்பிவித்து

துளசா பட்டணத்துக்கு நாம் போயிவிட்டதின் பிறகு நம்முடைய காரியஸ்த்தாள் ஷை கொட்டடியைப் பூட்டி முத்திரை வைத்து ஜாக்கிருதை செய்துகொண்டு வரும்போது அவடத்திலிருந்த காருபாரி முதலானவட்ரகள் ஷை கொட்டடி முதலானதுகளை நம்முடைய மனுஷாள் துறக்கக்கூடாதென்றும், அந்தயிடத்தில் முதலாயி வரக்கூடாதென்றும் தடைப்படுத்திப் போட்டார்கள். அது சங்கதியைக் குறித்து 39வது வரு சூன் மீ 12 வையாபுரி மேஷ்த்திரிக்கு இதிலடக்கஞ்செயிது வருகிற நகலின் காகிதம் யெழுதி அனுப்பிவித்திருக்கிறோம். இதுவுமன்னியில் அந்தயிடத்தில் நேமணக்கு செயிதிருந்த சேவுகன் கோவிந்தப்பனாயக்கனென் பவனை முதலாயி ஷை கப்பலண்டை வரக் கூடாதென்று ஷை யார்கள் தடங்கள் செய்திருக்குறதைக்குறித்து ஷை சேவுகனும் நமக்கு 39 வதுவரு நவம்பர் மீ 11 தேதியில் யெழுதிய காகிதத்துக்கும் யித்துடன் நகல் அனுப்பிவித்திருக்கிறோம். இப்படிக்கெல்லாம் நடந்திருக்க கொட்டடி நமக்குக்கொடுக்கவில்லையென்று சொல்லுவது மிகவும் பெரிய ஆட்சறியமாகயிருக்குது. பின்னும் ஷை ஜாப்த்தாவில் கண்டிருக்குற சாமான்களில் கப்பலில் பொழுது அளக்கிற துருபின் 2ம் கப்பல் கப்பித்தான் மாயில் யென்ப வருடையது. மற்று நம்முடைய சொந்தம். இப்படிப்பட்ட நம்மு டைய சொந்த சாமான்களை ஷை கொட்டிக்குள் நாம் வைக்கும் போதாவது எடுக்கும் போதாவது நம்முடைய சொந்த மனுஷாளைத் தவிற வேரை ஒருவருக்கு தெரியப்படுத்த வேண்டி யதுமில்லை. அதை ஒருவருக்கு ருசு குடுக்கவேண்டியது மில்லை. ஒருவனை வைத்துக் கொண்டு ஷை கொட்டடியை முத்திரை வைத்து ஒருவனுடைய வசப்படுத்த வேண்டிய அவசரமுமில்லை. இது தவிர வேலைக்காக வேண்டியதிருந்த ஆயுதங்களை அன்றாடகம் வாங்கி குடுபட்டது போக குடுபடாமலிருந்துவிட்ட சாமானுக்கு விபரம்: மறம் வெட்டப் போன வேப்பெண்ணைக் காட்டிலிருக்கும் கோடாலி யிதுதவிற கப்பல் சாமானுடனே ஒப்புக் கொண்டதில் ஷை யிடத்திலிருக்குர கப்பி சேதுபாவா சத்திரத்தில் சேவுகன் வசமாகயிருந்த கம்பாக பழசு - 2 கக்குக குளாயி செய்ய வேண்டி யதற்காக வேலைகாரனிடத்தில் கொடுக்கப் பட்டிருக்குற ஈய குழாயி - 2 யிது நீங்கலாக யாதொரு சாமான்களும் நாமெடுத்துக் கொண்டு போனதில்லை.

7-வது. ஷை கப்பலில் மக்கிப்போயிருந்த செப்புத் தகடுகளைப் பேத்து யெடுத்து முன்னுக்கு ஷை தகடுகளிலும் மடிச்சுப்போயிருந்த பங்குக்கால் தூளுகளையும் அவ்விதமாகவே போயிருந்த யிரும்பு ஆணிகளிலும் சிலதை ஸ்ரீமகாராஜா சாயேப் அவர்களுடைய

பார்வைக்காக வையாபுரி மேஷீத்திரி மூலியமாயி அனுப்பி வித்ததுந்தவிர மற்ற தகடுகளை வித்துமுதல் செயிதிருக்குர விபத்தையும் ஷை வையாபுரி மேஷீத்திரிக்கி உடனே யிருக்குரது மல்லாமல் நாம் முன்னமே அனுப்பிவித்திருக்குர கவுண்டு கறென்றி லும் யெழுதியிருக்குரதுனாலே இப்போ அதைக்குறித்து அதீகமான முகாந்திரமிப்போது சொல்லவேண்டிய அவசரமில்லை யென்று தங்களுக்கே நான்றாய் தெரியவரலாம். பின்னும் ஷை கப்பல் வேலைக்காக நாம் கருதி செயித தளவாட சாமானங்கள் கப்ப லண்டை (க்கிவந்து) போக மற்றதுகள் யேறக்குறைய ரெண்டரை வருஷத்துக்கு முன் கருதி செயித அந்தந்த யெடங் களிலே தானே கிடந்து அளிஞ்சுபோயிருக்க யிப்போ அதுகளை கருதி செய்து கொள்ளும்படிக்கி அரமனை மனுஷாளிடத்தில் ஒப்பிவிக்கும் படியாக சொல்வது யுக்தமாகயிருக் கலாமா? மேலும் மெய்க்காட்டு வேலை முதலானதுகள் நடந்திருக் குறதற்கு முன்னமே நம்முடைய கவுண்டு கறென்றில் யெழுதியிருக்க யிப்போ நூதனமாயி சறியான கணக்கு கொடுக்க வேணுமென்று சொல்வது ஞாயமாயிருக் கலாமா? ஆகிலும் ஷை கவுண்டு கறென்றில்க் கண்டிருக்கிற துகையை பிறித்து அறிந்து கொள்ள வேணுமென்கிற கருத்து தங்களுக்குள் ளிருக்குறதாயி நமக்கு தோணுகிறதுனாலே இதினடியில் யெழுதியி ருக்குற விபரத்தைக் கொண்டு தாங்கள் தெரிந்துகொள்ளலாம்.

விபறம்

| | ரூ | அ. | பை. |
|---|---|---|---|
| ஷை கவுண்டு கறென்றில் கண்டிருக்குற கூடுதல் துகை | 14014 | 14 | 0 |
| ஷை கூடுதல் துகையில் முதல் தடவை கப்பலை பழுது பார்க்க நேரிட்ட சிலவு | 1251 | 4 | 0 |
| ரெண்டாவது தடவை கப்பலை பிறித்து வேலை செயிது கொண்டு வந்ததற்காக தளவாடம் கொல்லு, ஆள், கணக்கப்பிள்ளை, றையிட்டர், காறிஸ்த்தன் முதலான சிலவு | 2393 | 0 | 0 |
| நம்முடைய சாப்பாட்டு சிலவு, பல்லக்கு, குதிரை சிலவு, சொந்த வேலைக்காரர் உள்பட மீ 19க்கு | 2144 | 10 | 0 |
| கப்பல் கப்பித்தான், சீப் ஆபிசர், சுக்கானி சிறாங்கு, தண்டல், கசாப்பு, கிலாசு | | | |

| | | |
|---|---|---|
| முதலானவர்களுடைய சம்பளம் | 7264 | - 0 - 0 |
| ஷை சிலவுகளானதற்கு நம்முடைய கையிவசமாயிருந்த பணம் போக வர்த்தகாளிடத்தில் நாம் வாங்கின பணங்களுக்கு நம் கொடுக்க வேண்டி யதாக வந்து சம்பவித்த வட்டி சொச்சம் | 960 | - 0 - 0 |
| ஆக கூடிய துகை | 14041 | - 14- 0க்கு |
| செப்புத்தகடு வித்துமுதலானதில் வரவு | 493 | - 9-0போக |
| பாக்கி வரவேண்டியதிருக்கிறது | 13521 | - 5 - 0 |

வது. கப்பல் வேலை முடியிறதற்கு முன்னுதாக கப்பித்தான், சிறாங்கு முதலானவர்களை அமத்தி வைத்துக் கொண்டு அவர்களுக்கு சம்பளங்கொடுக்க வேண்டிய அவசரமில்லையென்று சொல்லுகுறீர்கள். அப்படிக்கி முன்னாடி அமத்தி வைத்துக்கொள்ள வேண்டிய காரணமென்னவென்றால் 36 வருஷத்தில் கோறங்கியி லிருக்குற மேஷ்ட்டர்யீட்டன் துரையினுடைய வெங்கிட்ட ரெட்டி யென்று பேருள்ள கப்பலையும், 37 ஆம் வருஷத்தில் பவானகர் றாஜாவினுடைய தவுலத்து பிறசாது யென்று பேருள்ள கப்பலையும் நாம் பத்தாக்கூலிக்கி பிடித்து அனுப்பிவித்தபோது அந்த தருணங்களில் கெட்டிக்காறர்களும் சமுத்திரத்தில் அனுபோகப் பட்டவர்களும் அகப்படாமல் போன நிமித்தியம் அத்தருணத்தில் அகப்பட்டவர்களை அனுப்பவித்த தினாலே நம்முடைய தீவு போயி சேறாமல் அநேகம் நஷ்ட்டம் நமக்கு நேரிட்டிருக்குறதுனாலே அரமனை கப்பலை னாம் ஒப்புக்கொண்டவுடனே அந்தந்த வேலை களுக்குத் தகுமான கப்பித்தான் முதலானவர்களை அமத்தி வைத்துக் கொண்டு ஷை கப்பலுக்கடுத்த மேல் வேலை காரியங்களை அவாளிடமாயிவாங்கி வந்தோம். ஆனால் கவுலானபடிக்கி அரமனையார் சறிவர நடப்பிவித்திருந்தால் ஷை கப்பித்தான் முதலானவர்களுடைய சம்பளதுகையைப் பத்தி னாம் கேள்க்க வேண்டிய நிமித்தியமில்லை.

ஆகையால் இவ்விதமாக நடந்திருக்குர ஷை சிலவு துகைகளை அஞ்சு பாபத்தாகப்பிறித்து ஷை 7-வது யேக்கடாவில் யெழுதியிருக்குறோம். இந்தக் காறியங்கள் துவக்கத்தில் தங்கள் மூலியமாக நடந்திருக்குமேயாகில் யிப்பேர்ப்பட்ட நஷ்ட்டங்கள் நேரிட்டருக்கமாட்டாது. இதினால் நம்முடைய பொருட் சிலவானது மல்லாமல் நம்முடைய சரீரத்திலும் உபாதி கண்டு மெத்தவும்

வருத்தப்பட்டோம். முன்னிருந்த அரமனை காறிஸ்த்தான் நம்மை முழுதிலும் மோசஞ்செய்திருக்கிறார்களென் குறது தங்களுக்கு தெறியாமலிருக்கவில்லை. இப்படிக்கெல்லாம் அஞ்ஞாயப் பட்டிருக்குறு நாம் கரனாடகத்தாருடையவும், யிங்கிலீசுக்காரர் களுடையவும் ஒழுங்கு, ரீதி முதலானதுகளை நண்ணாயறிந்திருக்குற தங்களுடைய சமுட்செபத்தில் இந்த கேசை ஒப்புக்கொடுத்திருக் குறோம். இதுகளை தாங்கள் தயவுசெய்து நண்ணாயி கவனித்துப் பார்த்து மேலெழுதிய சிலுவுதுகைகளில் நமக்கு யெவளவு துகை கிடைக்கப்படுமென் கிறதையும் அல்லது ஒன்றுங்கிடைக்கமாட்டா தென்கிறதையும் ஒரே தடவையாக தீர்மானமாக ஒரு முடிவை செய்யவேணுமென்றும் அப்படிக்கி முடிவு செயிகுறதற்க்கு முன்னுதாக நம்மை யிவளவு துக்கமான செய்கைக்குள் உளப்படுததிவைத்த காறியங் களொல்லொன்றையும் னாம் சறிவர தெறிவித்திருக்குரபடியால் அதுகளையெல்லாம் தாங்கள் மனதுக்கு வாங்கி முடிவான தீர்மானத்தை தாங்கள் செய்வீர்களென்றும் நம்பி யிருக்குறோம். மேலும் ஷை கவுண்டு கறென்று முடிவான தேதிவரைக்கும் நேறிட்ட சிலவன்னியில் அதற்கு பின்பு நாளது வரைக்கும் நாம் கார்த்துக்கொண்டிருக்கிற காரியத்தினிமித்தியம் நமக்கு யெவளவு படிச்சிலவு நடந்திருக்கலாகுமென்கிறதையும் தாங்களே சிந்தித்துப் பார்க்கலாம். இந்த காரியத்தை தவிற நமக்கு யிந்த பிறாந்தியத்தில் வேரை காறியமில்லை. இதைப்பார்க்க இந்த விஷையத்தில் நாம் ஒன்றுந் தங்களுக்கு அதீகமாக யெழுதவேண்டிய தில்லையென்று சிந்தித்து இதினடியில் னாம் நம்முடைய கையொப்பம் வைக்கிற உத்திறவை தங்களிடத்தில் கேட்டுக் கொள்ளுகிறோம்.

I am,
Your most obedient servant
James Robs.

**ஆவணம் எண்-5** **ச. ம. எண் - 11**

மிகவும் பிரியமுள்ள ஸ்ரீ மேஸ்த்தர் ஜேமிஸ் றோஸ் துறையவர்களுக்கு வையாபுரி மேஸ்த்திரி சலாம்.

இப்பவும் யிவ்விடத்தில் க்ஷேமம். அவ்விடத்தில் தங்களுடைய க்ஷேமாதி க்ஷேமங்களுக்கு யெழுதி யனுப்பக் கோறுகிறோன். மேலும் தங்களுடைய கேட்டுக் கொள்ளுதலின் படிக்கு யேழு வருஷத்..................க்காக கொடுக்கும்படிக்கு ..........................கிறபடியால் அதற்காக முத்திரைக் காகிதத்திலே உடம்படிக்கை யெழுதிக்

கொடுத்துப்போட்டு ௸ கப்பலை ஒப்புக்கொண்டு ரிப்பேர் முதலான வேலைகள் செய்து வந்தாலதற்குள்ளாக ௸ கப்பலை வேலை செய்யும் படிக்கு தங்கள் வசப்படுத்த சரபேந்திரபட்டணம், காரியஸ்தாளுக்கு உத்திரவும் அனுப்பிவித்துயிருக்கிறோம்.

ஆகையால் அப்பாவுபிள்ளை அவ்விடத்துக்கு வருகிற படியினாலே ௸யார்களை வைத்துக்கொண்டு சகலகாரியமும் தீர்மானஞ்செய்து கொள்ளவேண்டியதுந் தவிர மைத்தப்டி சேதிக்கும் வேண்டிய காரியங்களுக்கும் யெழுதியனுப்பக் கோறுகிறேன்.

வேணும் சலாம்

1838 வரு இப்படிக்கு,
சூலாய்-மீ-8 உ (ஒப்பம்) வையாபுரி மேஸ்த்திரி
தஞ்சநகரம்

/True Copy/

James Rop.

**ஆவணம் எண் - 6**

Nagapatnam, 2nd Sept. 1841.

Sir,

போன மீ 25 ந்தேதி போடப்பட்ட தங்களுடைய கடுதாசியை வரப்பத்திக்கொண்டோம். அதில் தாங்கள் எழுதிய அவையடக்கங் களினால் நமது இங்கிலீசு கடிதங்கள் தங்களுக்குச் சரியான பாகமாகவில்லையென்று அறிந்து மிகுந்த விசனப்பட்டு நாந் தமிழ் அறியாதிருந்தும் யெப்படியாகிலும் நமது நியாயங்கள் தங்களுக்கு நன்றாய்த் தெரியும்படியாய், இந்தக் கடுதாசியை தமிழில் தானே தங்களுக்கு யெழுதுகிற வருத்தத்தை எடுத்துக் கொண்டோம்.

நாம் பத்தா கூலிக்கு ஸ்ரீ அரண்மனையாரிடத்தில் ஒப்புக்கொண்ட கப்பலுக்கு பழுது பார்க்க சிலவு, அரண்மனையார் திரும்பக் கொடுக்கிறதற்கு நமக்குண்டாயிருக்கிற நியாயங்களை, [illegible]த்து மனிதர்களுடைய கேழ்விக்கு செவி கொடுக்காமல் நியாயமாய் ஆராய்ந்து பார்த்தீர்களானால் ஒழுங்குப்படிக்கு அது நமக்கு ............க்க, வேண்டுமென்று தாங்கள் நியாயஞ் செய்வீர்களென் பதற்கு நாம் எள்ளளவேனுஞ் சந்தேகப்படவில்லை.

தாங்கள் நமக்கு எழுதின கடுதாசிகளில் நாம் மாத்திரம் ஸ்ரீ அரண்மனைக்கு உடன்படிக்கை எழுதிக் கொடுத்திருக்கிறோம். . . . . . . . . . . . உத்தரவும் பெற்றுக் கொள்ளவில்லை யென்று

சொல்லி வந்தீர்கள். சரிதான். அரண்மனை யாருக்கு முந்த உடன்படிக்கை நாம் எழுதிக் கொடுக்க வேண்டியது. அப்பால் அவர்கள் நமக்கு எழுதிக் கொடுக்க வேண்டிய நியாயமாயிருக்கிறது.

இது இப்படி இருக்க, வையாபுரி மேஸ்திரி நமக்கு எழுதின கடுதாசியில் ... ... ... ...ஸ்ரீ அரண்மனையார் பின்னாக நமக்கு கவுலாத யெழுதி யனுப்புகிறதாய் யெழுதின படியால், அதை நம்பி நாம் வேலையை துடங்கினோம். ஆனால் அரண்மனையார் கவுலாத கொடுக்கவில்லை. கொடாவிட்டாலும் அரண்மனையார் கொடுக்கிறோமென்று அரண்மனை உத்தியோகஸ்தர் மூலியமாய் நமக்குக் கடுதாசி யெழுதினதை நாம் நம்பி ஒப்புக்கொள்ள வேண்டியதாயில்லை? . . . . . . . . . . . . . இது சங்கதி தங்களுக்கு தெரிந்தபடியாய் வையாபுரி மேஸ்திரி நமக்கு யெழுதின கடுதாசிக்கு நமக்கு சரியான நகல் தங்கள் பார்வைக்கு இத்துடன் மறுபடியும் உள்ளடக்கம் பண்ணி அனுப்பு யிருக்கிறோம்.

மேலும், நாங் கப்பலை முந்த பழுது பார்த்து வெளியே விட்ட பிறகு தண்ணீர் கொண்டதினால் மறுபடியும் கரைக்குக் கொண்டு வந்து பின்பு வையாபுரி மேஸ்திரிக்கு கப்பலுக்கு அதிகமான பழுதிருக்கிறதென்று பழுது பார்க்கப்படுவதற்கு ரூ. 3000 சொச்சஞ் செல்லுமென்றும் அது அரண்மனையார் தானே கொடுக்க வேண்டுமென்றும் ஷையாருக்கு உடனே நாங் கடுதாசி யெழுதி தெரியப்படுத்தச் சொன்னதற்கு ஷையார் நமக்கெழுதி ............ல் ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்கள் (நம்மை) சமூகத்தில் வரச் செய்து ஒன்று நாம் புறப்பட்டாலும், வேலை நிறுத்தாமல் நடக்கும்படியாய் உத்தரவானதாயும் யெழுதினார். இந்தக் கடுதாசியை வரப்பத்திக் கொண்டவுடன் அப்பாவு பிள்ளை என்பவரிடத்திலிருந்து நமக்கு வந்த கடுதாசியில் ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்கள் நம்மை அழைப்பிக்கும்படி உத்தரவானதா யெழுதி இந்த யிவர்களுட இரண்டு கடுதாசிகளுக்குஞ் சரியான நகல் பண்ணி இத்துடன் மறுபடியும் உள்ளடக்கம் பண்ணி அனுப்பி யிருக்கிறோம். ஷை யார்களுடைய கடுதாசிகள் நமக்குப் போதுமான தஸ்தாவேஜி யல்லவோ, நியாய தலத்தில் இதுகள் யேத்துக் கொள்ளப்படத் தக்கதல்ல வென்று நியாயக்ாரர் சொல்லுவார்களா?

ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்கள் நாம் வரும்படி உத்தரவனுப்பினவுடனே வேலைகள் சறுவ சாக்கிரதையாய் நடக்கும்படி திட்டஞ் செய்துபோட ...............உடனே புறப்பட்டுவந்து ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்கள் பேட்டியும் முந்தினவிசை கண்டு

மறுநாள் நாம் வந்த காரியத்தைக் குறித்துப் பேசயிருக்கையில் ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்களுக்கு சாவகாசமில்லாமல் வேறே முக்கியமான காரியமிருக்கிறதாயும், நாம் மறுபடியுஞ் சாலவிநாயக்கன் பட்டணத்துக்கு திரும்பிபோய் கப்பல் வேலை கடியசீக்கிரத்தில் முடியும்படியாய் சாக்கிரதை செய்கிற ...........இருபது நாளைக்குள்ளாக கவுலாத்தும், பணமும் அனுப்பி விக்கிறதாய் ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்கள் சொன்னதாக வையாபுரி மேஸ்திரி சொன்னார். அப்படி .................அழைப்பிவித்து வர்த்தகாளிடத்தில் கடனாக பணங்களும் வாங்கி வேலை து.................பாய்நடப்பிவித்துக் கொண்டு பணத்துக்காகவும் கவுலாத்துக்காகவும் இரண்டுமாதங் கார்த்திருந்தும் வராமலிந்த பொழுது யிந்த இரண்டு மாதத்திற்கு மத்தியில் கவுலாத்து அனுப்பும் படியாய் ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்களுக்குத் தெரியப்படுத்தும்படி வையாபுரி மேஸ்த்திரிக்குக் சாகிதமெழுதி யனுப்பியுங் கடிதம் வராமலிருந்தது. இப்படி யிருக்கும் பொழுது நாங் கப்பல் வேலையை கண்காணிக்கும்படியாய் தண்ணீரில் நிற்க அடிக்கடி உபாந்தியப்பட்டதில் நமக்கு திரேக அசவுகரியமுண்டானதினால் சவுக்கியத்துக்காக துளசாபட்டணம் போக தீர்மானித்துக் கொண்டு நாம் ஊரை விட்டுப் புறப்படுகிறதற்கு முதல் நாளாகிய 1839 வரு - மார்ச்சு 4 ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்களுக்கு தெரியப்படுத்தும்படியாய் வையாபுரி மேஸ்திரிக்குக் காயிதமெழுதி, அந்தக் காகிதத்துக்குள் சென்னைப்பட்டணம் யேசன்று துரை நமக்கு அனுப்பிவித்த கடுதாசியையும் அடக்கம்பண்ணி அனுப்பிப்போட்டு பின்பு கப்பல் வேலை நடக்கிறதற்கு குலாப்க்கான், சுப்பர்கார்கோ, மத்த காரியக் காறரையும் நியமித்து வேலை ஜரூராய் நடக்கும்படியாய் உத்தரவு கொடுத்து புறப்பட்டோம். காரியங்கள் இவ்விதமாய் இருக்கும்பொழுது நாம் யாதொரு சேதியும் ஸ்ரீ அரண்மனையாருக்குத் தெரியப்படுத்த வில்லை யென்று சொல்லுகிறது நியாயக்காரர்களால் அங்கீகரிக்கப்படுமா. செப்ற்றெம்பர் வரைக்கும் நாங் கவுலாத்துக்காக கார்த்திருந்தும் வராமல் போனதினாலே கப்பல் வேலையை நிறுத்தி அடுத்த நவம்பர் ரிசிடெண்டு கப்ட்டன் கலீசு துரையிடத்தில் வந்து அவரைக் கொண்டு ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்களிடத்திலிருந்து கவுலாத்து அழைப்பிவித்துக் கொடுக்கும்படியாய்க் கோட்டுக்கொண்டோம். அவர்கள் அப்படியே ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்களுக்கு எழுதியனுப்பினார்கள். அதற்கு ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்கள் உடனே பதில் பிரதியுத்தார மெழுதி நமக்குச் சொன்னதென்னவென்றால் கப்பலை ஒப்புக்கொண்ட துரை கப்பல் விஷையத்தில் மிகுந்த சிறுமத்தை அடைந்தார்களென்பதை தாங்களறிந்திருக்கிறதாயும் நாளை யாதினம் நம்முட

கேட்டுக்கொள்ளுதலின்படியே கவுலாத மாத்திரமல்ல பணமும், அனுப்புகிறதா யெழுதியனுப்பினார்கள். அனுப்பப்பட்ட இந்தக் கடுதாசியை கப்ட்டன் டக்லீசு துரை நமக்குக் கா..............(நாம் மறுநாள்) ............துரையவர்களுக்கு அன்று தினத்தில் ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்களிடத்திலிருந்து வந்த கடுதாசியில் ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்கள் நாம் அந்த கப்பலை விட்டு விடவும். உடன்படிக்கையை தள்ளிப்போடவுங் கப்பல் தளவாடங்களை நாமே யெடுத்துக் கொள்ளவுங் கப்பலை வேலை துவங்கினது முதல் யிதுவரையில் அது விஷயத்தில் சிலவிட்ட சிலவை கணக்கிட்டு இவ்வளவுயென்று துகை சொன்னால் அதை கொடுத்துவிடு கிறோமென்று நம்மை கேட்டுக்கொள்ளுகிறதாய் ஷை காப்ட்டன் டக்லீசு துரை நமக்கறிவித்தார். ஆனால் யிந்த கப்பலை நாம் ஒப்புக்கொண்ட யிந்த பதினேழுமாதக் காலத்தில் நமக்கு யாதொரு குதாவடைகள் நேரிடாமல் தீவுக்கு சபர் போயிருக்குமாகில் மூன்றுநாலு விசைக்கதீகமாய் ஒட்டியிருக்கலாம். ஒவ்வொரு சபரில் சில லெட்ச ரூபாய்கள் சம்பாதித்திருக்கலாம். என்கிரதைக் குறித்து நாம் விசனப்பட்டாலும் ஸ்ரீ மகாராஜா சாயேபு அவர்களுட விருப்படி செய்வோமென்று தீர்மானித்து கப்ட்டன் கலீசு துரைக்கு இப்படி யாகட்டுமென்று சம்மதித்துக் கப்பல் கப்பித்தான், சிராங்கு, மத்த காரியஸ்த்தர் யாவரையுந் தள்ளிப்போட்டு வேலையையும் நிறுத்தி நம்முட கார்க்காரனாவையமெடுத்துப் போட்டு, நம்முட ஜாமான் தளவாடங்கள் தளவாடங்கள் வைத்திருந்த கொட்டடியை அதுகளோடே பூட்டி முத்திரை வைத்து, நின்ற சிலவு கணக்குப் பார்த்ததிலான துகை ரூ. 14014 அணா 14 செப்புத்தகடு வித்ததில் கூடுதலான ரூ. 493 அணா 9 தள்ளி பாக்கி ரூ. 13521 அணா 5 க்கு கணக்குக் கொடுத்தோம். இது சங்கதிகள் யாவற்றுக்கும் போதுமான தஸ்தாவேஜிகளும் நடந்த காரியங்கும் வெளியரங்கமா யிருக்கக் கொள்ள நமது இஷ்டப் பிரகாரங் கணக்கு சோடித்து அனுப்பினதாகச் சொல்லுகிறது நியாயமாயிக்குமா? நாம் இப்படி செய்கிறதற்கு நம்மை ஒரு சின்ன மனிதராகத் தங்கள் புத்தியில் நினைக்கிறீர்களா? நம்மைக் குறித்து இப்படி சொல்லுகிறது. தங்களுக்கு ரொம்பவும் தூரமாயிருக்கட்டும். இது நமக்கு அளவற்ற வீசனத்தை உண்டாக்கிற்றென்று துக்கத்தோடு சொல்லுகிறோம்.

மேலும் தாங்கள் ஆக்ட்டிங் ரிசிடென்று மெஸ்த்தர் பேலி துரையவர்களுக்கு யெழுதின கடுதாசியில் 1838 சனவரி மீ கப்பலைப்பார்க்கிறதென்று சொன்னதாயு மெழுதினீர்கள். நாங்கப்பலில் யாதொன்றையும் பிடுங்கி பாராமல் அந்த உருவு யிருந்தபடியே மாத்திரம் பார்வையிட்டு சொன்னதொழிய மற்றபடி

. . . . . . . . . . யென்றால் மத்த கப்பலின் உள்ப் புறத்தில் அடைத்திருக்கிற பூதாரிப் பலகைகள் ஒரு சாண் இடை வழி விட்டு பலகை தைத்திருக்கும். ஆனால் யிதுவோ யேகத்துக்கும் ஒரே அடைப்பாய் பூதாரிப் பலகைப் போட்டியிருந்த படியினாலேயே பலகையை எடுத்துப் பார்த்தாலொழிய சரியாய் சொல்லக்கூடாது. அப்படியும் நாம் அங்கங்கே பூதாரிப் பலகைகளை உடைத்துப் பார்த்திருப்போம். அவ்விடத்திலிருந்து அந்த கப்பலை செய்தவர்களும், அதைப் பார்த்தவர்களுமான மனிதர் அது அத்தனைக்கு பழசு அல்லவென்று சொன்னதினாலும் நாமும் அதை உடைத்துப் பார்க்கிறது அத்தனை அவசரமில்லையென்று யெண்ணி அப்படிக்குச் சொன்னோம். பழுது பார்க்க வேண்டியது களாயிருந்ததுகளை பழுதுபார்த்து நாங் கப்பலை தண்ணீரில் விட்டபோது கப்பல் தண்ணீர் கொண்டது. அப்பொழுது தான் அது முத்திலும் பழுதென்று அறிந்து அந்தப் பழுதைப் பரிசோதிக்கும்படியாய் வெளியே கொண்டு வந்து பூதாரிப்பலகைகளை உடைத்துப் பார்க்கும் பொழுது, பலகைகளும், பங்கு கால்களும் மக்கியும், மடித்தும் போயிருந்தது. என்னத்தினா லென்றால் கப்பல் வெளியே யிருந்த காலத்தில் கொட்டாகை மேலே போட்டு பதனப்படுத்தாமல் மழையிலுங் கிடந்தபடியினாலேயே மேலே யிருக்கிறசூரல் வழியாய் மழையினால் தண்ணீர் கொண்டு பலகைகளும் பங்கு கால்களும் மடித்த தென்று அறிந்தேன். அப்பொழுதே அரண்மனையார் - மாதிரி பார்க்கும்படிக்கு சிலதை அனுப்பிவித்தேன். இது மிகுந்த பழுதாயிருக்கிறதை அறிந்து முழுத செவ்வைப் படுத்தாமல் விட்டுவிட்டால் ஸ்ரீ அரண்மனையாருக்கு நாம் பத்தா கூலிக்கு வருஷம் 1க்கு ஒப்புக்கொண்ட ரூ. 6000 படிக்கு அது வரையில் சென்ற பதினேழு மாதத்துக்கு மாத்திரமல்ல, நாம் உடன்படிக்கையில் ஒப்புக்கொண்ட யேழு கப்பலை நீங்கள் யெடு ................கொள்ளும்போது இந்தச் சிலவுகளெல்லாம் நீங்கள் கொடுக்கவேண்டியிருக்க ......................அநியாயமென்று சொல்லலாமா இந்த சிலவுகளுக்கெல்லாம் விபரமான கணக்குக் கொடுத்திருக்கிறோம். வருஷத்துக்குங் கணக்காலுள்ள அநேகமாயிர ரூபாய்கள் கொடுக்க பாத்தியப் பட வேண்டுமே. இதற்காகவே நாம் அதை வேலை செய்யாமல் விட்டு விடாமல் உடனே காரியமிப்படி யிருக்கிறதென்று தெரியப்படுத்தினோம். மேலும் உடன் படிக்கையில் ரூ. தஉளக்கு மேல்ப்பட செல்லுகிற துகை அரண்மனையார் தானே செய்து கொடுக்கிறதென்று கண்டிருக்க அப்படிக்கும் நாம் அரண்மனையாரைக் கேளாமல் அதை நாம் ஒப்புக் கொண்டபடியால் அதுகளை சீக்கிரம் பழுது பார்த்து கப்பல் ஓடச் செய்கிறது நமது பொறுப்பென்றும், அது ஓடவில்லை யென்றால்

அரண்மனையாருக்கல்ல நமக்கு பெரிய நஷ்டமென்று நாம் அறிந்த படியால் ஒரு வேளை பணங் கொடுக்கிறதற்கு ஸ்ரீ அரண்மனையார் யோசித்தால் ...............செய்து அப்பால் ஞாயப்படி பேசிக்கொள்ளலாமென்று தீர்மானித்து அரண்மனையாரைப் பணமல்ல, கவுலாத்துக்காக மாத்திரங் கேட்டு துடருமிடத்து அரண்மனையார் தானே கவுலாத்தும் அத்துடனே பணமுங் கொடுக்கிறதாய்ச் சொன்னார்கள். அப்பொழுது அரண்மனையார் நியாயஸ்தலத்தாரானபடியால் .................வேண்டியது தங்கள் கடமையென்று நினைத்து உடன்படிக்கைப்படி போகி .........களென்று அறிந்து கவுலாத்துக்காகவும், பணத்துக்காகவும் கார்த்திருக்கும் பொழுது, கவுலாத்தும் அத்துடன் பணமுங் கொடுக்கிறோமென்று சொன்ன ஸ்ரீ அரண்மனையார் ............அப்பால் பத்தாக்கூலிக்குவிட மனதில்லையென்றும் அதற்காக செ..........ற சிலவுகளையும் அதின் தடவாடங்களையும் கொடுத்துவிடுகிற தென்றுஞ் சொன்னார். நாம் ஒருவிசை பத்தாக்கூலிக்கு யேழு வருஷத்துக் கென்று ஒப்புக்கொண்ட .................ததியில் அரண்மனையார் மனதுபிரகாறம் விடுகிறதற்கு நமக்கு ஒருபோதும் ஞாய...........திருந்தும் அரண்மனையாட்ர மனதுப்படி போகிறது நன்மையென்று நாம் நல.......... கையால் நினைத்து அவர்கள் மனதுப்படி செய்யச் சம்மதித்தும் நாம் அதற்க..............ட்ட சரீரபிறையாசங்கள் யாவற்றும் அரண்மனையார் நிமித்தம் வீணாய் .............யிருக்க நாம் நமது சொந்தத் திலுங் கடன் வாங்கியுஞ் சிலவிட்ட சிலவு பண............அரண்மனையார் சரிவரக் கொடாமலிருப்பது மிகுந்த அநியாயமென்கிற ............ அரண்மனையாருக்கும் மற்ற ஞாயக்காரருக்குந் தெரியாததல்ல.

மேலும் நாங்கப்ப............... விட்ட சிலவு ரூ. கூ கூ சொச்சமென்று கணக்கிட...................... ப்பலில்தானே சிலவின வகை தாங்களெண்ணிக்கொண்டதாய் தங்களுட................. லத்தெரிய வருகிறது................ பல்ல நாம் இந்த கப்ப.................... ஒப்புக் கொள்ள.............ம்பி.................... சிராங்கு மற்றுங் கப்பல் வேலைக்க.......... இதன்றிக் கப்பல் வேலை .............. தற்கு வைக்கப்பட்டிருந்த ரையிட்டர், கணக்கப்பிள்ளை, வேலையாள்க்கள், மாடு, வண்டிக்காறர் படிச்சிலவு நம்முட குருதை சவாரி, பல்லக்கு சவாரி ஒவ்வொரு சிலவையும் கணக்கிட்டு யேகத்துகை போட்டிருக்கிறதை அறி.............. இவ்வளவு நியாயமாய் சென்றது யென்கிறதை நம்புகிறதில் தாங்கள் அனுப..........யிராமலிருக்கிறதில்லை. உடன்படிக்கைக்கு விரோதமாய் கப்பலை நீங்கள் யெடு............கொள்ளும்போது இந்தச் சிலவுகளெல்லாம் நீங்கள்

கொடுக்கவேண்டியிருக்க. . .......... அநியாயமென்று சொல்லலாமா இந்த சிலவுகளளுக்கெல்லாம் விபரமான கணக்குக் கொடுத்திருக்கிறோம்.

மேலும் செப்புத்தகடுகளை நாம் ரூ. 493 க்கு வித்து யெடுத்துக் கொண்டதாயும் அந்தத் தகடுகளும் ஈயக்குண்டுகள், மற்ற சாமான்களும் ரூ.3000 பொறுமானதுகளாய் தங்கள் காரியஸ்த்தன் சொல்லுகிறதா யெழுத்னர்கள். நல்லது அந்த செப்புத்தகடுகள் புதிதாய் செய்யப்பட்டபொழுது இவ்வளவு துகை பெறுமான தாயிருந்ததென்று வைத்துக்கொள்ளுவோம். ஆனால் ஷை கப்பல் செய்து, பழசாய்போனபோது அந்த செப்புத்தகடுகள் செய்த பண துகைக்கு சரியாயிருக்குமா. அதுகளை நாம் வித்து எடுத்துக் கொண்டதாய் சொல்லுகிறதை ஒப்புக் கொள்ளப்படத் தக்கவல்ல ரூ.2000 பெருமான செப்புத் தகடு பலமுள்ளதாய் செய்யப்படுகிறதற்கு அது அச்சாரங் கொடுக்கப்பட்டிருக்கிறதே தவிர வேறல்ல. இந்துப் பணத்தைக் கேட்குமிடத்தில் அவன் ஒப்பந்தப்படிக்கு ஒப்புக்கொண்டாலொழிய அச்சாரங் கொடுத்தது கொடுக்கமுடியாதென்று வியாட்சியஞ் செய்கிறான். இது நமக்கு யெவ்வளவு பெரிய நஷ்டம். கணக்கில் தாக்கல் பண்ணால் தள்ள வேண்டியிருக்க அதையும் ஒப்புக்கொண்டோம். ஈயக்குண்டுகளும் இப்படிமலவாதியிடத்து வைக்க. . .. . . . . . . . . . . . . கடு செய்ய அச்சாரங் கொடுத்திருக்கிறது.

சாலவநாயக்கன் பட்டணம் காரியஸ்தர் நாங் கப்பல் விஷையத்தில் மெய்க்காடு கூலிக்கு சிலவிட்டது ரூ.300 சொச்மென்று சொல்லுகிறதாய் யெழுதினீர்கள். மகடூல் இராமசாமி, கார்பாரி முன்னுக்கு அவர் பார்வையிட்டு தானே கோழிலெட்டுக்காறருக்கு மாத்திரம் ரூ.300 சிலவானங் கொடுத்திருக்க இப்பொழுதெழுதின காரியஸ்தன் சொன்னது எத்தனை பெரிய நிசமானால் மத்த தொழிலாளிகளுடைய கூலிகளெல்வளவென்று பார்த்துக் கொள்ளுங்கள் அன்றியும் பலகை முதலான சாமான்கள் செய்கிறதற்கு அச்சாரங் கொடுத்தது மாத்திரம் யேறக் குறைய ரூ.1000 சிலவானமாகி யிருக்கிறதற்கு கணக்கினாலும் வேலை ஒப்புக்கொண்ட தொழிலாளிகளொவ்வொருத்தராலும் போது மானபடி ரூபகாரிப்படுத்துவோம்.

மேலும் ஸ்ரீ அரண்மனையார் நமக்கு கப்பல் வேலை செய்கிற தளவாடங்களும் ஜாமான்களும் வைத்துக்கொள்ளும்ப டிக்குக் கொடுத்த கொட்டடியில் ஷை கப்பல் ஜாமான்கள் மாத்திரம்

வைத்ததல்ல நம்முடையவுங், கப்பல் கப்பித்தானுடையவும் பொருள்களாகிய ரூ.3000 சிலவானம் பெறத்தக்க (சாமான்)கள் அந்த அறையிலே வைக்கப்பட்டிருந்தபடியால் நாம் அதைப் பூட்டி முத்திரை வைத்தோம். அதிலிருந்த கப்பல் ஜாமான்கள் தவிர, சாட்டுடிருபின் இரானாமிட்டா என்னப்பட்டக் கப்பல் கெடியாரம் இன்னமும் சாஸ்த்திரப் பொஸ்த்தகங்களுமிருந்தது. பூட்டி முத்திரை வைத்திருந்ததாகிய அரையை உடைத்திருக்கிறதாயும் அதிலிருந்த ஜாமான்களெல்லாம் இல்லாமலிருக்கிறதாயும் சமாசாரம் வந்தது அநேகருக்கு ...... நியாயஞ் செய்கிறவர்களுந் தருமமாய் இராட்சிய பரிபாலனம் செய்கிறவர்களுமான ஸ்ரீ அரண்மனையார் நாம் முத்திரைபோட்டு பூட்டிவைத்த கொட்டடியை நமது அனுமதியுஞ் சம்மதமுமில்லாமல் திறக்கிறதற்கும் நம்முட பொருள்களை யெடுத்துக்கொள்ளுகிறதற்கு. . ... . . . . . .. அவநியாயத்தைப் பார்க்கிலும் இது எத்தனை பெரிய அவநியாயம். மற்ற அவநியாயங்களிருக்கட்டும். இந்தக் காரியமொன்றை மாத்திரம் பேசுகிறதானால் பிறிட்டில்லாவில் நமக்கு நீதி நம்முட இங்கிலீசு பாஷையில் தங்களுக்குச் சரியா யெழுதியிருக்க நமது சரியான அபிப்பிராயத்தைத் தங்களுக்கு மனுஷாள் தங்களுக்குத் தெரியப்படுத்தவில்லை யென்கிறதைத் தாங்கள் நாம் இரட்டித்து எழுதினோமென்று சொன்னதினாலறிந்து தமிழ் அறிந்த ஒருவரைக் கொண்டே யிந்தக் கடிதமெழுதுகிற மிகுந்த வருத்தத்துக் குள்ளானோம். ஆகையால் தாங்கள் மற்ற மனிதருடைய கேள்விகளை வாங்காமல் இனிமேல் யி. . . . . . . சிறித்து நாம் யாதொரு வருத்தத்தையும் அடையாமலும் நியாயம் பெற்றுக் கொள்ளுகிறதற்காக இனி நாம் உழைக்காமலுமிருக்கிறதற்காக தாங்கள் தயவுசெய்து யிது காரியங்கள் யாவற்றையும் சீர்தூக்கிப் பார்த்துத் தாங்கள் அரண்மனையை . . . . . . . டுத்தும்படியாய் . . . . . . . கிறபடியால் த. . . . . . பேர் பிரஸ்தாபங் . . . . . . .த்தியாய் எல்லா. . . . . . . .டும்படிக்கும் இனி யிந்தக் காரியத்தைக் குறித்து நாம் நியாய முதலானதுகளுக்குப் போகிறதினால் நமக்குண்டாயிருக்குஞ் சிறுமத்தையும் வெகுவாக்கும்படிக்குத் தங்களை அநேக வந்தனங்களோடே கேட்டுக் கொள்ளுகிறோம்.

I am

Sir

Your most obedient Servant,

James Rop.

Bavajee Ramajee Pandit,

Sirkell of His Highness the Rajah of Tanjore.

# ஆங்கில ஆவணங்கள்

His Highness [illegible] Rajah

With utmost regard and Submission
I do hereby take the freedom to apprize your Highness,
that in obedience to your order given in the Cutchery
for to proceed to the Island of Ceylon on purpose of
Importing Horses from thence, for which I am
ready to sail with the Vessel Doniya with the needful
Others on the 16th Inst. from hence; & hope by your High-
ness's favour to return safe of all danger & Molestation
of the Sea soon as practicable.—

Heartily wish & hope that this short
Voyage may be a commencement of many tender, that
I may by that means willingly & ardently work in
your duty faithfully & zealously to your Highness's
entire Satisfaction.—

My Families are entirely under your
Highness's Superior Protection... permit me to conclude,
Submissively beg your Highness to accept the assu-
rance of my most dutiful consideration with which,

I Remain with due Respect,

Salwenaikpalam
15th January 1820.

Your Highness's
Most Obedient & most
dutiful humble Servant
[illegible]

Worthy Sir,

I have the honor to acknowledge the receipt of your kind Letter undated, and I am very thankful for your great & kind advice given regarding my Brother in law, accordingly a Petition will be addressed to His Highness in very short, about the payment what your goodness mentioning in your Letter, there would not be any objection of an excellence. —

I Remain with due regard

Shilomaik p.m. the 1st March 1820 } Worthy Sir,

your most obedient
& humble Servant.
Erik Söderlund

# துணைநூற் பட்டியல்

1. Anbarasu, K. (1993), **Geomorphological configuration of Tamil Nadu coast from Coloeroon to Pulicat,** Ph.D. Thesis submitted to the Tamil University. Thanjavur.

2. Arasarathan, S. (1986) **Merchants, Companies and commerce on the Coromandal coast - 1650 - 1749,** New Delhi.

3. Chandrasekar, N. (1992) **Beach placer Mineral exploration along the central Tamil Nadu Coast,** Ph.D thesis submitted to Madurai Kamaraj Univerity.

4. Chockalingam, M and Rajamanickam, G. V. (1995), **Coastal geomorphology of the region between Devipattinam and Mandapam, Tamil Nadu.** IGCP - 274 Project Workshop on Evolution of east coast of India.

5. Hall, K.R (1980), **Trade and statecraft in the Age of the Cholas,** New Delhi.

6. Loveson V. J. (1993), **Geological and Geomorphological investigation related to sea-level variation and heavy mineral accumulation along the Southern Tamil Nadu beaches, India,** thesis submitted to Madurai Kamaraj University, Madurai.

7. Malleson, G. B. (1893), **History of the French in India,** London.

8. Poundurai, Raju. (1990), **The History of Secular Architecture of Tamil Nadu with Special Reference to Thanjavur District,** Tamil University, Thanjavur.

9. Poundurai, Raju. (1989), **'Maratha Architecture at its best : Manora',** Indian Express Weekend, Madras.

10. Poundurai, Raju. (1989), **'Architecture of King Serfoji II : Manora'** (in Tamil), Mamannar Serforji II vol.I, Sarasvathi Mahal Library, Thanjavur.

11. Rajamanickam G. V. (ed), (1990), **Sea level Variation and its impact on coastal environment,** Thanjavur.

12. Rajamanickam, G. V. and Arulraj. V. S. (1994) **Maritime History of South India,** Thanjavur.

13. Santhi Devi. R. (1999), **Geomorphology of the coast between Adirampattinam and Nagapattinam, Tamil Nadu**, M.Phil. Thesis submitted to the Tamil University, Thanjavur.

14. Umma Sabitha, A. (1999), **Geomorphology of the coast between Devipattinam and Sethubava Chattiram, Tamil Nadu**, M.Phil thesis submitted to the Tamil University, Thanjavur.

15. Vaidyanathan, R. (1993) **Quarternary of the East coast of India, Current sevence Vol No.** 64 : 3-4.

16. Virddhagirisan, V. (1942), **The Nayaks of Tanjore,** Annamalainagar.

17. Will and Ariel Durant, (1975), **The Age of Napolean,** Newyork.

18. இராசு, செ. (1983), **தஞ்சை மராட்டியர் செப்பேடுகள்-50** தஞ்சாவூர்.

19. இராசு, செ, (1987), **தஞ்சை மராட்டியர் கல்வெட்டுக்கள்,** தஞ்சாவூர்.

20. சுப்பிரமணியன், பா (1989), **தஞ்சை மராட்டிய மன்னர் மோடி ஆவணத் தமிழாக்கமும் குறிப்புரையும் (இரண்டாம் தொகுதி),** தஞ்சாவூர்.

21. சொக்கலிங்கம், வீ. **மோடிச் செய்திகள்,** சரசுவதிமகால் நூலகப் பருவ இதழ்கள், தஞ்சாவூர்.

22. பாலசுப்பிரமணியன், குடவாயில் (1987), **சோழமண்டலத்து வரலாற்று நாயகர்களின் சிற்பங்களும் ஓவியங்களும்,** தஞ்சாவூர்.

23. பால சுப்பிரமணியன், குடவாயில் (1995), **தஞ்சாவூர்,** தஞ்சாவூர்.

24. பாலசுப்பிரமணியன், குடவாயில் (1999) **தஞ்சாவூர் நாயக்கர் வரலாறு,** தஞ்சாவூர்.

25. வேங்கடராமையா, கே.எம் (1984) **தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும்,** தஞ்சாவூர்.